# BALA CHIKITSA NIDANAM.

**A MANUAL OF COMMON DISEASES OF CHILDREN,**
**THEIR CAUSES AND TREATMENT**
**ACCORDING TO THE AYURVEDA SYSTEM.**

---

# பால சிகிற்சா நிதானம்.

பூர்வகாலத்து வைத்திய சிகாமணிகள் கையாடிவந்த
ஏட்டுப் பிரதிகளின் ஆதரவைக்கொண்டும்
சுய அனுபோகத்தைக்கொண்டும் எழுதப்பட்டது.

---

Compiled with the aid of Ancient records
used by eminent Ayurvedic Physicians of the past
and prepared after practical experience
in different cases.

BY

**MARIAMMAL DANIEL.**

**SISU VAIDYA ASRAMAM, NEYYOOR.**



Price 6 annas. விலை 6 அணா.

# SOME SELECT OPINIONS.

## சில மதிப்புரைகள்.

---

DR. P. PALPU, M. B., C. M., *Deputy Surgeon, District Hospital, Nagercoil*, writes:—

"I went through BALA CHIKITSA NIDANAM kindly sent to me by Mrs. Mariammal Daniel and I find it very interesting and instructive. It is a compendium of diseases of children and their treatment according to the Ayurvedic system of medicine. The drugs recommended are available even in the remotest corners of villages and as such the book will be of much use to the masses. The antenatal treatment suggested is very good and deserves to be tried by every expectant mother. The language also is very simple and can be understood even by those who have only a little knowledge. I congratulate Mrs. Daniel on her successful elucidation of the various diseases of children and their proper treatment".

---

நாகர்கோவில் கவர்ண்மெண்ட் கிறன்ட் இன் எய்ட் ஆயுர்வேத ஆஸ்பத்திரி தலைமை வைத்தியரும், மெடல்தாரியுமாகிய ம-௱-௱-ஸ்ரீ பி. நீலகண்ட பிஷகாசாரியா அவர்கள் எழுதுவது:—

"மிஸிஸ். மரியம்மாள் டானியல் எழுதியிருக்கும் இச்சிறு புஸ்தகத்தை நான் கூர்ந்து பார்வைசெய்தேன். இது பால சிகிற்சை சம்பந்தமாய் நீண்டகால அனுபவத்தைக்கொண்டு எழுதப்பட்டதும், சாஸ்திர ஆராய்ச்சி அமைந்து விளங்கப்பெற்றதுமாகும். இதில் சொல்லப்பட்டிருக்கும் ஔஷதப் பிரயோகங்களும், ஆசிரமத்தில் செய்துவைத்திருக்கும் மருந்துகளும் குழந்தைகளுக்கு முற்றும் பொருந்தினவை தானென்றும், அவை ஒருவிதத்திலும் தீமை செய்யக்கூடியனவல்லவென்றும் நான் உறுதியாய்க் கூறுவேன்".

REV. N. H. HARRIS, *Martandam*, writes:—

"Mrs. Mariammal Daniel of **Sisu Vaidya Asramam, Neyyoor**, comes of a notable family of physicians. Her father and grand-father were personally known to me as Ayurvedic Physicians of a high order. Mrs. Daniel has studied the art from her childhood under her father and is doing very useful service in treating children's diseases".

---

M. R. RY., N. MAHADEVA IYER AVL., M.A., D. ECON., L. T., & INTER. SC. (Lond.), *Group Scout Master, Trivandrum*, writes:—

"I have great pleasure in testifying that during the past four years I have often placed my children under the treatment of the able physician of the **Sisu Vaidya Asramam, Neyyoor**, and I have no hesitation to say that I found the diognosis always correct, the treatment very effective and the cure permanent. The general success which attends the treatment indicates the extensive knowledge possessed by the physician in the principles and practice of the Oriental Treatment of Infants' Diseases.

I can confidently reccommend that all kinds of children's ailments may safely be confided to the treatment of the above Asramam".

# CONTENTS.

## பொருளடக்கம்.

---

கடவுள் வாழ்த்து.

தாதலர்ப் பைம்பொழிலோர் தந்த இதயமொன்றுங்
கோதகல வுற்ற குருமருந்தே!—பூதநோய்க்குப்
பாலர் நிதானம் பரிவா யுரைக்கவுனின்
கோலத் திருவருளே கூர்.

4288.

# Introduction.

## முகவுரை.

ஆதிகாலத்திலிருந்த மனிதர் அழகிற் சிறந்தவர்களாகவும், அதிக உயரமுடையவர்களாகவும், ஆகாரத்துக்காக பழங்களை மாத்திரம் புசித்து, தண்ணீரைப் பருகிவந்தவர்களாகவும், சத்தியந் தவறாதவர்களாகவும் ஒரே கடவுளை மாத்திரம் வணங்குகிறவர்களாகவும் இருந்தார்களென்றும், அக்காலத்தில் அவர்களுக்கு யாதொரு நோயுமின்றி நீண்ட ஆயுள் இருந்ததென்றும், அதற்குப்பிறகு அவர்கள் பொய்யராகி பல இச்சைகளுக்கு இடங்கொடுத்து அறுசுவை பதார்த்தங்களை உண்டு பல தெய்வங்களை வழிபடத் துவக்கினதினால் அவர்களைப் பல நோய்களும் பிடித்ததென்றும், அழகிலும் வயதிலும் குறைந்துவிட்டார்களென்றும், புலிப்பாணியென்னும் முனிவரது வாகட நூலிற் சொல்லப்பட்டிருக்கின்றது. அன்பின் வடிவாகிய கடவுள் ஆத்ம நோய்களின் பரிகாரத்தைப் புகட்ட அருள் மறையை அளித்தவண்ணம் இச்சடலத்தின் நோய்கள் நீங்கி மனிதர் களிப்புற்று உய்யுமாறு ஆயுள்வேதம் என்னும் சாஸ்திரத்தையும் முற்காலத்தில் சோழ நாட்டில் வாழ்ந்திருந்த பார்வதி தேவியாருக்கு உபதேசித்தருளினாராம். இவ்விஷயமாய் ஆதிநூல் என்னும் சாஸ்திரத்தில் பின்வரும் கவிகளைக் காணலாம்.

"வரர்சுரர் மனுவரண்டம் வளர்விந்து வியர்வைவித்து
பறவைதே வர்யுத்திரர் பாங்குதா பரங்களாக
சீர்வளர் ஜாதிநாற்கால் நிறையேழு வகையீதென்றே
சீர்பெறப் படைத்துஆட்ந்து செய்தொழில் முடித்தாரையா.

மங்களச் சோழதேசம் மாதுமை வாழும்நாளில்
அங்கவ ளரனுரோடு அடியிணை போற்றிசெய்து
துங்கனே சுகிர்தவானே தொல்புவி படைத்தநாதா
தங்கிய மனுவோரெல்லாம் சாகிறு ரேதோஐயா.

இரக்கம்வைத் திதனைக்கேட்ட எந்தன்மா துமையேகேளாய்
தரைக்குள்மா னிடர்கள்செய்கை தங்களா லழிவதல்லால்
வரைக்குள்ளே நம்மேல்குற்றம் வைப்பதொன் றில்லைகண்டாய்
திரைகள்சூழ் புவியில்வாழ்வோன் சிந்தைசிந் தனையாலாகும்.

பூமியில் நரருண்டாக்கி போகமும் புசிப்புமுண்டாய்
ஏமமும் தொழிலும்நல்கி ஈசனை நினையுமென்றோம்
நாமமே வணங்கிநன்றாய் நம்மையே நினையுமென்றோம்
அம்மொழி வணங்கிடாமல் அவமதி செய்கின்றாரே.

படிதனில் வாழும்மாந்தர் பவுசுவந் துற்றபோது
கொடியிடை மடவாரசை கொள்ளுவர் நம்மையெண்ணார்
வடியடிப் பட்டபோதும் வறுமைவந் துற்றபோதும்
அடியிணை பணிவாரென்று அரனுமைக் கருளிச்செய்தார்.

சாத்திரந் தன்னைப்பாரார் தர்மசிந் தனைகள்செய்யார்
கோத்திர மறிந்தொன்றீயார் குருவினை வணக்கஞ்செய்யார்
பாத்திர மறிந்தொன்றீயார் பாவமே செய்தோர்க்கெல்லாம்
சூத்திர நோயேயல்லால் துஷ்டரை யடக்கொணுதே

பிறந்தமா னிடருக்கெல்லாம்
பித்தமும் வாதமய்யம்
நிறைந்தநீர்க் கடல்போல்செய்தோம்
நிறையின்றிப் பெருத்தாலுந்தான்
குறைந்தது நாலுவன்னோய்
குடிகொள்ளும் கொள்ளாவண்ணம்
அறிந்துடன் நடப்பாராகில்
அடர்பிணி தொடராதையா”

ஆயுள் வேத சாஸ்திரம் ஆதியில் இலட்சம் கவிகள் அடங்கினதோர் பெருங் கிரந்தமாக இருந்திருக்கின்றது. இப்பெரும் சாஸ்திரமானது மனிதர்களின் அறிவுக்கு முற்றிலும் எட்டாத பொருளென்று கருதப்பட்டு படிப்பவருக்கு அதிக வருத்தமுண்டாகாத படி எட்டு வகையான சிகிற்சைகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. அவை வருமாறு:—

(1) காய சிகிற்சை. இது சுரம், அதிசாரம், குஷ்டம் முதலிய தேகத்திலுண்டாகும் வியாதிகளையும் அவற்றின் சிகிற்சைகளையும் தெரிவிக்கின்றது.

(2) பால சிகிற்சை. இதில் குழந்தைகளுக்குக் காணும் வியாதிகளையும் சிகிற்சைகளையும் அறியலாம்.

(3) கிரக சிகிற்சை. இது மனதைக் கெடுத்து உண்டாகிற மனோரோகங்களையும் அவற்றின் நிவிர்த்தியையும் காட்டுகின்றது.

(4) ஊர்த்வாங்க சிகிற்சை. இதில் கண்டத்திற்குமேல் இருக்கிற உறுப்புகளின் விவரத்தையும் அவைகளுக்கு நேரிடும் வியாதிகளையும் அவற்றின் சிகிற்சைகளையும் கண்டுகொள்ளலாம்.

(5) சல்ய சிகிற்சை. இது ஆயுதங்களின் உதவியைக் கொண்டு செய்கிற சிகிற்சையைக் காட்டுகின்றது.

(6) விஷ சிகிற்சை. இது விஷங்களைக் குறித்துச் சொல்லுகின்றது.

(7) ரசாயன சிகிற்சை. இதில் ஜீவகாலத்தை நீடிக்கச் செய்கிற கல்ப முறைகளைக் கண்டுகொள்ளலாம்.

(8) வாஜீகரண சிகிற்சை. இதில் ஜெனனேந்திரியங்களுக்குக் காணுகிற வியாதிகளையும் அவற்றை நிவிர்த்தி செய்துகொள்ளும் வழிகளையும் அறிந்து கொள்ளலாம்.

அகஸ்தியர் தன்வந்திரி என்னும் இரண்டு முனி சிரேஷ்டரும் இக்கலைகளை நன்குணர்ந்து தாங்களும் வேறு முனிவர்களும் பதினெட்டுச் சித்தர்களும் தென் மொழியில் பெருந்தொகையான நூல்களை இயற்றினார்களாம். அவையில் முக்தி வழிகாட்டும் ஞான காவியங்களும் ஆயுளைப் பெருக்கக்கூடிய வைத்திய முறைகளும் அடங்கியுள்ளன. பின்வரும் கவிகள் இதற்கு அத்தாக்ஷியாகும்.

"தானான அகஸ்தியனார் சொன்னநூல்கள்
தாங்குமோ அதன்தொகைகள் சொல்லப்போனால்
மானான சட்டமுனி சொன்னதப்பா
வையகத்தில் மூன்றனந்தங் கோடியாகும்
நானான நந்தீசர் எட்டு லெக்ஷம்
தேரையரும் பத்துலெக்ஷம் சொன்னாரப்பா
கோனான போகனுமோ அனந்தங்கோடி
குணமான வாசமுனி மூன்றுலெக்ஷம்

மூன்றான புண்ணாக்கர் எட்டுலெக்ஷம்
முக்கியமாய் அழுகண்ணர் லெக்ஷம்சொன்னார்
நன்றான கன்னிசித்தர் நாலுலெக்ஷம்
நாகசித்தர் பன்னிரண்டு லெக்ஷம்சொன்னார்
சொன்றான கொங்கணர்எட்டனந்தங்கோடி
செயலான கருவூரார் சிறப்பனந்தங்கோடி
அன்றான சத்திசிவன் சித்தர்முத்தர்
அன்பான சத்திமுதல் சொன்னாரப்பா.

சொன்னாரப்பா தெக்ஷண மூர்த்திதானும்
சேகரமாய் கருவூரார் நரசிங்கர்தானும்
வன்னமுற ராமதேவர் தன்வந்திரியாரும்
வளமான இடைக்காட்டார் ரோமரிஷிதானும்
சொன்னதப்பா தொகையில்லை அனந்தங்கோடி
செயலான மச்சமுனி சிறப்பனந்தங்கோடி
நன்னயமாய் சுந்தரனும் நாட்டங்கொண்டு
நலமாக சிறப்பனந்தங் கோடிசொன்னார்"

முன் சொல்லப்பட்டிருக்கும் எட்டு வகையான சிகிற்சைகளிலொன்றாகிய பால சிகிற்சையும் விரித்துக் கூறிய ஏராளமான நூல்களுடையதா யிருக்கின்றது. ஆயினும் அனுபவத்திற்கு இசைந்ததாயும் ஆராய்பவருக்குத் திகைப்பை யுண்டாக்காமலும் இருக்கக்கூடிய அநேக சுருக்கமான சாஸ்திரங்களும் தமிழில் உள்ளன. அவை அச்சுப்பிரதிகளாக வெளிவராமல் கையெழுத்துப் பிரதிகளாகவே காக்கப்பட்டிருக்கின்றன. ஆராய்ந்து தேர்ந்த அநேக பண்டிதரின் அரிய முறைகளும் அகஸ்தியர் முதலிய முனிவர்களின் சத்தான சில

வைத்திய காவியங்களும் எட்டுப் பிரதிகளில் மறைபொருளாகவே யிருந்து வருகின்றன. பாலாசிரிய சதகத்தை யியற்றினோர் தமது நூலின் தலைப்பில்:

"முத்திபெறும் தவமுனிவர் பதினெண்பேரும்
முன்முறையா லவரவர்க் கிசைந்தவண்ணம்
எத்தனையோ பாடிவிட்டார் கோடாகோடி
இனிமையுட னனேகவித பாஷைதன்னில்
நித்தியமாய் தமிழ்மொழியை யாய்ந்துபிள்ளை
நிதானநூல் வாகடத்தின் முறையைத்தேர்ந்து
சத்தியமாய் அறிவுரைக்கும் மருந்தின்சூட்சம்
சாற்றுகிறேன் ஆசிரியம் நூறுந்தானே"

என்று பாடியிருக்கிறார்.

மேற்கூறிய உபதேசங்களைக் கடைப்பிடித்து இந்தச் சிறு நூலில் நாம் சிசு ரோகங்களில் சிலவற்றையும் அவற்றின் பிரிவுகளையும் விவரித்துக் காட்டி அவற்றிற்கு வேண்டிய ஔஷதப் பிரயோகங்களையும் வெளிப்படுத்தலானோம். தாய் தந்தையர் தங்கள் குழந்தைகளுக்கு உண்டாகும் நோய்களை உற்றுக் கவனித்து ஆரம்பத்திலேயே அவற்றின் காரணங்களைத் தடுத்து நோய்களை அகற்றப் பிரயத்தனம் எடுத்துக்கொள்வது நலம். அனேக நோய்களின் குறிகுணங்கள் இதில் விவரிக்கப்பட்டிருப்பதால் அவற்றின் வகைகளை இலெகுவில் கண்டறியலாம். தோட்டங்களிலும் கடைகளிலும் கிடைக்கக்கூடிய மூலிகைகளைக்கொண்டு சுரசஞ் செய்தும், கஷாயஞ் செய்தும், புட்டவியல் செய்தும் இந்நூலில் சொல்லப்பட்டிருக்கும் முறையின்படி

குழந்தைகளுக்கு ஊட்டிவந்தால் மிகுந்த அனுகூலமுண்டாகும். நம் நாட்டு முறைமையின்படி பாலகர்க்குப் புகட்டும் ஔஷதங்களின் பல வகுப்புகளை பின்வருங் கவி காண்பிக்கின்றது.

"துலக்கமொரு நூறுக வோதுமுறை வாகடம்
சூட்சமுறை யாய்ந்து முன்னூல்
சொல்லுவேன் குளிகைபொடி கியாழம்நல் மூலிகை
துய்யகண் டுஷநெய்யும்
பிலக்கமோ டொற்றல்கிழி கிறுதமோ டெண்ணெயும்
புழிந்திடும் பாகமதுவும்
புட்டவியல் கவளமொடு தல்லிப் புழிதலும்
பூச்சுநற் பச்சைவெட்டும்
நிலைக்குறுதி யாகயான் செய்துவரும் பாகமும்
நிசமான பாகமதுவும்
நிகர்முனிவர் பதினெண்பே ரோதுமுறை தேறியே
நேர்தமி ழாகவேதான்
இலக்கணம் பிசகா யிருக்கினு மிக்கவிக்
கிசல்தனைழ பிச காகினுமோ
இசலான பாகமது பிசகாம லோதுவேன்
இசம்புமா சிரியர்நாறே"

எல்லா மருந்துகளையும் பக்குவஞ்செய்துகொள்வது சாதாரண ஜனங்களுக்குப் பெருங் கஷ்டமாயிருப்பதாலும், அவர்கள் அவ்விதஞ் செய்துகொள்ளப் பிரயத்தனிப்பதால் ஒன்றுக்குப்பதில், தெரியாமல் இன்னொன்றைச் சேர்த்தும் நிறையளவுகள் கிரமந்தப்பிச் சேர்த்

தும் விஷ மூலிகைகள் தகுந்த சுத்திசெய்து சேர்ப்ப தற்குப்பதில் சுத்தியில்லாமற் சேர்த்தும் மருந்துகளின் பிரயோஜனத்தைக் கெடுத்துப்போடக் கூடியதாயிருப் பதால், நம்தேசத்து முனிவர்களும் அவற்றைச்செய்து கொடுக்கப் பண்டிதர்க்கே கற்பித்திருக்கிறார்கள். ஆன படியால் பெரும் பிரயாசத்தோடும் அதிக பொருட் செலவோடும் நீண்டகால உழைப்போடும் செய்து முடிக்கவேண்டிய பல ஔஷதங்களை நாமே தயார் செய்து வைத்து யாவரும் அவற்றின் பிரயோஜனத்தை அடையும்படி மிதமான கிரயத்திற்குக் கொடுத்து வருகின்றோம்.

எமது பிரயத்தனத்தில் மனப்பூர்வமாய் உதவிகள் புரிந்தவரும் காலஞ்சென்ற எமது தந்தையரின் சிஷ னும் தற்காலத்தில் ஆயுர்வேத பண்டிதருமாயிருக்கிற பிலாங்காலே ஸ்ரீமான் தேவராஜ் வைத்தியர் அவர் களுக்கு நன்றி கூறுகின்றோம்.



# BALA CHIKITSA NIDANAM.

# பால சிகிற்சா நிதானம்.

---

## Diseases relating to Pregnancy and their treatment.

## கெர்ப்ப ரோகங்களும் அவற்றின் பரிகாரங்களும்.

ஸ்திரீகளுக்கு கெர்ப்ப காலத்தில் வாயுவென்றும் கிரந்தியென்றும் சூலையென்றும் பல வகுப்புப்பச் சார்ந்த ரோகங்கள் அணுகி சில சமையங்களில் கருவை அழித்து விடுகின்றது. இந்நோய்கள் வாகட சாஸ்திரங்களில் பின்வருமாறு விபரிக்கப்பட்டு அவற்றிற்கு அவுஷதங்களும் கூறப்பட்டிருக்கின்றது.

"தானான தாய்தந்தை குணத்தைநேர்ந்து
        சார்ந்தகடா கெர்ப்பமதில் காப்பன்வாய்வு
ஊனான சூலையொடு பலநோய்தொந்தித்து
        உற்பவித்துக் கருவையுரு வழியச்செய்யும்
வானான வாய்வுசிக்கி நின்றதாலே
        வயற்றுவலி மாதாந்த சுரோணிதந்தான்
தேனான சூலையுமா மூன்றுநான்கு
        திங்களின்மே லவுஷதங்கள் சித்தியாமே.

சித்தியாங் கெர்ப்பம்நின்ற திங்களொன்றில்
        சிறுவலிதான் வலித்திடுகில் செப்பக்கேளு

பத்தியாம் கூவளைவேர் நன்னாரிவேரும்
பாகமாய்க் கஷாயமிடப் பறந்துபோகும்
புத்தியாம் திங்கள்ரண்டில் வசம்புசுட்டுப்
போடுகுடி நீர்மூன்றில் புகலக்கேளு
சத்தியாம் வசம்போமம் ரண்டுஞ்சேரு
சதுர்மாசஞ் சுக்குநீர் தன்னைக்கூட்டே.

கூட்டுகின்ற திங்களைந்தில் பஞ்சமூலம்
குடிநீரா மதியாறில் தசமூலக்கஷாயம்
ஈட்டுகின்ற எழில்ரா மிச்சஞ்சுக்கு
வெந்தருந்து மிருநான்கில் விதனங்காணில்
நாட்டுகின்ற விழுதியிலைக் கஷாயமூட்டு
நவதிங்கள் மருந்தரசன் தோலுமாகும்
சாட்டுகின்ற திங்கள்பத்தில் மதுகப்பூ
சர்க்கரைநீ ருடனருந்தத் தணியும்நோவே"

---

## மேற்சொல்லப்பட்டிருக்கும் மருந்துகளின் விவரம்.

கெர்ப்பவதிகளுக்கு வயிற்றில் வலியுண்டாயிருந்தால்:-

முதல் மாசம்—வில்லைவேரும் நன்னாரிக் கிழங்கும் வகைக்கு இரண்டு கழஞ்சுவீதம் சதைத்துக் கஷாயஞ் செய்து காலையிலும் மாலையிலும் கொடுக்கவேண்டும். இப்படி இரண்டு மூன்று தினங்கள் கொடுக்கலாம்.

இரண்டாம் மாசம்—ஒரு கழஞ்சு வசம்பைச் சுட்டு சதைத்து கஷாயமிட்டு தினம் இரண்டு தடவை வீதம் இரண்டு நாள் கொடுக்கவேண்டும்.

மூன்றும் மாசம்—வசம்பும் ஓமமும் வகைக்கு ஒரு கழஞ்சு வீதம் கஷாயஞ்செய்து காலையிலும் மாலையிலுமாக இரண்டொரு தினம் கொடுக்கவேண்டும்.

நான்காம் மாசம்—இரண்டு கழஞ்சு சுக்கைச் சதைத்து கஷாயமிட்டு தினம் இரண்டு தடவை வீதம் கொடுக்கவேண்டும்.

ஐந்தாம் மாசம்—சிறுமல்லிகை, பெருமல்லிகை, கருஞ்சுண்டை, கண்டங்கத்தரி, முள் நெரிஞ்சி வகைக்கொரு கழஞ்சுவீதம் சேர்த்துக் கஷாயமிட்டு தினம் இரண்டு தடவை வீதம் மூன்று தினம் கொடுக்கவேண்டும்.

ஆறும் மாசம்—சிறுமல்லிகை, பெருமல்லிகை, கருஞ்சுண்டை, கண்டங்கத்தரி, முள்நெரிஞ்சி, வில்லை வேர், தழுதாழை, பெருவாகை, பெருங்குமிழ், பாதிரி இந்த பத்து மூலிகைகளையும் வகைக்கு அரைக்கழஞ்சு வீதம் சேர்த்துச் சதைத்துக் கஷாயஞ்செய்து இரு வேளையாகக் கொடுக்கவேண்டும். இப்படி மூன்று நாள் ஆறு நேரம் கொடுக்கலாம்.

ஏழாம் மாசம்—ராமிச்சமும் சுக்கும் வகைக்கு ஒரு கழஞ்சு வீதம் கஷாயமிட்டு காலையிலும் மாலையிலும் கொடுக்கவேண்டும். இப்படி மூன்று தினம் கொடுக்கலாம்.

எட்டாம் மாசம்—ஒரு பிடி வீழி இலையைக் கஷாயஞ்செய்து தினம் இரண்டு தடவை வீதம் இரண்டு மூன்று தினம் கொடுக்கவேண்டும்.

ஒன்பதாம் மாசம்—இரண்டு கழஞ்சு அரச மரப் பட்டையைக் கஷாயமிட்டு காலை மாலை இரண்டு தடவையாக இரண்டொரு தினம் கொடுக்கவேண்டும்.

பத்தாம் மாசம்—அரைக்கழஞ்சு இலுப்பைப் பூவை ஜலம் விட்டு அரைத்து சர்க்கரை சேர்த்துக் கொடுத்து வரலாம்.

இவை எல்லாவற்றிற்கும் இச்சாபத்தியம்.

---

## கெர்ப்பத்தில் காணும் துவாலைக்கு

"தணிவான முதல்மாசம் வயறுநொந்து
தரிப்புடனே உதிரமது சற்றேகாணில்
கணியான தாமரையி னல்லிசந்தம்
கமழூமிரா மிச்சமரைக் கழஞ்சுவீதம்
அணியான கமலாவின் பாலிலாட்டி
அணித்திடுவாய் திங்கள்ரண்டி லதுபோல்காணில்
கொணியான கமுகின்பூ நிலப்பனைவேர்சந்தம்
கொவ்வைநீர் பால்கூட்டிக் கொடுக்கநன்றே.

நன்றான திங்கள்மூன் றதனில்சோரை
நண்ணிடுகில் கார்கோலுஞ் சமனதாக
குன்றான தசநேர மாவின்பாலில்
கொடுத்திடு நாலதில் வலித்துக் குருதிவீழில்

அன்றாக நிலப்பனேநன் ஞரித்தண்ணீரில்
அரைத்தாவின் பாலிலளித் திடுநீயஞ்சில்
பொன்றாத செண்பகப்பூ சந்தனமுங்கார்கோல்
புனலிலரைத் தாவின்பாலில் புகட்டத்தீரும்

புகழுகின்ற இருமூன்றில் வலித்துரெத்தம்
பொசிந்திடில் நெய்தல் பூவிரண்டு
தகழுகின்ற புனலிலரைத் தாவின்பாலில்
தாக்கிடுநீ திங்களே ழுதனில்காணில்
நிகழுகின்ற நெய்தல்பூ ராமிச்சம்வேர்
நேர்கூட்டிப் பாலிலரைத் தியம்பப்போகும்
பகருகின்ற திங்களெட்டில் உதிரந்தோன்றில்
பாலில்ராமிச்சம் நெய்தல் பூவுமூட்டே

ஊட்டமுறும் திங்களொன் பதனில்சோரை
உளேவுமீறிற் ருமரையி னல்லியோடு
வாட்டமுறும் விழாலரிசி சமனுய்ப்பாலில்
மாட்டியரைத் தூட்டிடவே மாறிப்போகும்
மூட்டமுறுந் திங்கள்பத்தி விசிவுகாணில்
முருக்கந்தோல் கார்கோலு மொன்றதாக
நாட்டமுடன் சமனரைத்துப் பசுவின்பாலில்
நல்கிடவே மாறுமென நவின்றார்தாமே.''

---

## மேற்கூறிய ஔஷதங்களின் விபரம்.

முதல் மாசம்—தாமரைப் பூவினுள்ளிருக்கும் அல்லியும், சந்தனமும், ராமிச்சமும் வகைக்கு அரைக் கழஞ்சு விதம் பசுவின் பாலில் அரைத்துக் கலக்கிக்

கொடுக்கவேண்டும். இப்படி தினம் இரண்டு தடவை வீதம் பத்து நாள் கொடுக்கலாம்.

இரண்டாம் மாசம்—கமுகின் பூவும் நிலப்பனைக் கிழங்கும் சந்தனமும் வகைக்கு அரைக்கழஞ்சு வீதம் கொவ்வை இலைச்சாற்றாலரைத்து பசுவின் பாலில் கலக்கி கொடுக்கவேண்டும். இதுவும் முன்போல் பத்து தினம் கொடுக்கலாம்.

மூன்றாம் மாசம்—இரண்டாவது மாசத்துக்குச் சொல்லியிருக்கும் மருந்துகளோடு அரைக் கழஞ்சு கார்கோலரிசியும் சேர்த்து அந்தப் பாகத்தில் கொடுக்க வேண்டும்.

நான்காம் மாசம்—நிலப்பனைக் கிழங்கும் நன்னாரிக் கிழங்கும் வகைக்கு ஒரு கழஞ்சு வீதம் தண்ணீரில் அரைத்துப் பாலில் கலக்கிக் கொடுத்துவர வேண்டும்.

ஐந்தாம் மாசம்—செண்பகப் பூவும், சந்தனமும், கார்கோலரிசியும் வகைக்கு அரைக் கழஞ்சு வீதம் தண்ணீரிலரைத்துப் பாலில் கலக்கி முன்போல் கொடுத்து வரவேண்டும்.

ஆறாம் மாசம்—இரண்டு நெய்தல் பூக்களை தண்ணீர் விட்டு அரைத்து பசுவின் பாலில் கலக்கி முன்போல் கொடுத்துவரவேண்டும்.

ஏழாம் மாசம்—ஒரு நெய்தல் பூவும் ஒரு கழஞ்சு ராமிச்சமும் பாலிலரைத்துக் கலக்கி முன்போல் கொடுத்துவரவேண்டும்.

எட்டாம் மாசம்—ஏழாவது மாசத்துக்குச் சொல்லியிருக்கும் பிரயோகத்தின்படி ஒரு நெய்தல் பூவும் ஒரு கழஞ்சு ராமிச்சமும் பசுவின் பால் விட்டு அரைத்து அந்தப் பாலில் கலக்கிக் கொடுத்து வர வேண்டும்.

ஒன்பதாம் மாசம்—தாமரைப் பூவினுள்ளிருக்கும் அல்லியும் விழாலரிசியும் வகைக்கு ஒவ்வொரு நேரத்துக்கு ஒரு கழஞ்சு வீதம் பசுவின் பால் வார்த்தரைத்து பாலில் கலக்கி தினம் இரண்டு தடவை வீதம் கொடுத்துவரவேண்டும்.

பத்தாம் மாசம்—முள்முருக்கு மரத்தின் பட்டையும் கார்கோலரிசியும் வகைக்கு அரைக் கழஞ்சு வீதம் பசுவின் பாலிலரைத்துக் கலக்கி கொடுத்துவரவேண்டும். இவற்றிற்கும் இச்சா பத்தியம்.

---

## கேர்ப்பத்தில் காணும் துவாலைகளுக்கு போதுப்பிரயோகம்.

நவிலுவேன் கெர்ப்பத்தில் துவாலைக்கெல்லாம்
நல்லநெய்தல் கிழங்குடன்நன் னாரிவேரும்
புவியதனில் சந்தனமும் வெள்ளிலோத்திரம்
போதவே வகைக்கரைக் கழஞ்சதாக
சுவிகரமாய்ப் பச்சரிசிக் கழுநீர்தன்னில்
தொந்தமுட னரைத்ததனைச் சுகமாயூட்ட
கவிழுகின்ற குருதியுமே தடைதலாகும்
கண்பார்த் திவையறிந்து கருத்தாய்ச்செய்யே.

மேற்படி மருந்துகளின் விபரம்:—

நெய்தல் கிழங்கு, நன்னாரிக் கிழங்கு, சந்தனம், வெள்ளிலோத்திரம் இவைகளை வகைக்கு அரைக் கழஞ்சு வீதம் பச்சரிசி கழுவின தண்ணீரிலரைத்துக் கலக்கி தினம் இரண்டு தடவை வீதம் நாலைந்து தினங்கள் கொடுத்துவரவேண்டும். (வெள்ளிலோத்திரம் என்பது ஒரு கடைச்சரக்கு).

---

## கேர்ப்பத்தில் சூலைக்கு.

கருத்தான கெர்ப்பத்தில் சூலைதானும்
காணவே முதல்மாசம் கலந்ததானால்
இருத்தாதே உள்நடுக்கம் அகங்கைகால்நெஞ்
செரிவுண்டாம் துவாலையது இசிவுகாணும்
தருக்கான தாமரையின் முட்டுசந்தம்
தகரையிலை ராமிச்சஞ் சமனதாக
கருத்தான ஆவின்பால் தன்னிலாட்டி
கொடுத்துவிடு தினமூன்று குணமுண்டாமே.

மேற்படி மருந்துகளின் விபரம்:—

தாமரைக்கிழங்கும், சந்தனமும், தகரையிலையும், ராமிச்சமும் வகைக்கு அரைக் கழஞ்சு வீதம் பசுவின் பாலிலரைத்துக் கலக்கி தினம் இரண்டு தடவை வீதம் மூன்று நாள் கொடுக்கவேண்டும்.

உண்டான மாசம்இரண்டில் சூலைதோன்றில்
உள்ளெரிவு பரதாபம் உதரநோவு

கண்டாயோ துவாலைசலங் கலங்கலாக
கழுநீர்போ லொழுகுமிந்தக் குணமேயானால்
கொண்டாடு மருந்தொன்று கொட்டிமூலம்
குணமான வெண்கொட்ட மேலத்தோடு
விண்டாயோ சமபாக மாவின்பாலில்
விரைந்தரைத்துப் புகட்டிடநோய் விட்டுப்போமே.

மேற்படி மருந்துகளின் விபரம்:—

கொட்டிக்கிழங்கும், வெண்கொட்டமும், ஏலமும் வகைக்கு அரைக் கழஞ்சு வீதம் பசுவின் பாலில் அரைத்துக் கலக்கி கொடுக்கவேண்டும். இவ்விதம் காலை மாலை இருவேளையும் மூன்று தினம் கொடுக்கலாம்.

விட்டெழுந்த மாசம்மூன் றதனில்சூலை
மேவிடுகி லுதரத்தில் விதனமுண்டாய்
பட்டெழுந்த கண்சிவந்து இருண்டுதோன்றும்
பரிவான துவாலைநிறம் பரிந்துகாணும்
தொட்டெழுந்த மருந்துகொட்டிக் கிழங்குதக்கோலந்
தொகைரண்டும் வகைவகைக்கோர் கழஞ்சதாக
தட்டெழுந்த தண்ணீரி லரைத்துப்பாலில்
தாக்கிடவே நோய்தீருந் தயவுதானே.

மேற்படி மருந்துகளின் விபரம்:—

கொட்டிக்கிழங்கு தக்கோலம் இவைகளை வகைக்கு ஒரு கழஞ்சு வீதம் தண்ணீரிலரைத்து பசுவின் பாலில் கலக்கி முன்போல் கொடுத்துவரவேண்டும்.

தயுவான மாசம்நான் கதனில்சூலை
தாமுதர வலியுந்தி தன்னில்நோவாய்
கயவான உதிரமது கலங்கிமிக்க
கட்டிதுட்டி யாய்கழியும் கைகால்சோர்வாம்
நயமான நெரிஞ்சிவே ரானைத்தந்தம்
நவிலுகொட்டிக் கிழங்கிவை நன்னீரிலாட்டி
சுயமான காராவின் பாலிலேதான்
தொந்தித்துப் புகட்டிடவே சுகமுண்டாமே.

**மேற்படி மருந்துகளின் விபரம்:—**

முள்நெரிஞ்சி வேர், கொட்டிக்கிழங்கு, யானைப் பல் இவைகளை வகைக்கு அரைக் கழஞ்சு வீதம் தண்ணீர் வார்த்தரைத்து பசுவின் பாலில் கலக்கி முன் போல் கொடுத்துவரவேண்டும்.

சுகமான திங்களைந்தில் சூலைதோன்றில்
துவாலையுடா உதிரமது கலங்கலாகி
சகமான கட்டிதுட்டி யாகவேதான்
சார்ந்துகழு நீர்நிறமாய்த் தானேகாணும்
முகமான தாமரையின் வளையம்கொட்டி
மூலந்தக் கோலமரைக் கழஞ்சுவீதம்
இதமான பாணிவார்த் தரைத்துப்பாலில்
இருவேளை மூன்றுதின மீந்தால்போமே.

**மேற்படி மருந்துகளின் விபரம்:—**

தாமரைக்கிழங்கு, கொட்டிக்கிழங்கு, தக்கோலம் இவைகளை வகைக்கு அரைக்கழஞ்சு வீதம் தண்ணீர் வார்த்து அரைத்து முன்போல் பாலில் கலக்கிக் கொடுத்துவரவேண்டும்.

ஈந்திடவே திங்களாறு தன்னில்சூலை
இசைந்த குணம் கீழ்முதுகு நோவதாகி
மாய்ந்திடவே வயிற்றுவலி எரிவுண்டாகும்
வளமாகத் துவாலையது கழிதலாகும்
தேர்ந்திடவே திற்பிலிமுந் திரிகைப்பழமும்
சூக்ஷமுடன் வகைக்குஒரு கழஞ்சதாக
தேய்ந்திடவே கமலாவின் பாலிலேதான்
தினமூன்று புகட்டிடவே தெளிவுண்டாமே.

**மேற்படி மருந்துகளின் விபரம்:—**

திற்பிலியும் முந்திரிப்பழமும் வகைக்கு ஒரு கழஞ்சு வீதம் பசுவின் பாலிலரைத்து தினம் இருமுறை வீதம் மூன்று நான்கு தினங்கள் கொடுக்கவேண்டும்.

தெளிவான சூலைதிங்க ளேழில்தாவில்
திடமாகப் பிரசவநோ வதுபோலாகி
துளிவான சுரோணிதமுங் கழிதலாகும்
சோர்வுண்டாந் தேகமதில் துயரம்மெத்த
களியான அத்திக்தோல் கொட்டிமூலம்
கற்கண்டு சர்க்கரையும் கழஞ்சில்பாதி
நளியான பாலிலரைத் தாவின்பாலில்
நாள்மூன்று புகட்டிடவே நன்மையாமே.

**மேற்படி மருந்துகளின் விபரம்:—**

அத்திப்பட்டை, கொட்டிக்கிழங்கு, கற்கண்டு, சர்க்கரை இவைகளை வகைக்கு அரைக் கழஞ்சு வீதம் பாலில் அரைத்துக் கலக்கி முன்போல் கொடுத்து வரவேண்டும்.

நன்மையாம் திங்களெட்டில் எழுந்தசூலை
நன்றாக உதரத்தில் பசியுற்றாற்போற்
பெண்மையாம் பேறுகா லத்துநோவு
போலிருக்கும் முதுகுளையும் துவாலைகாணும்
தண்மையாம் நீர்சுழற்று மின்னங்கேளு
தரிப்புகா லூடேறில் வருத்தம்தோஷம்
உண்மையா மத்தித்தோல் இரத்தசந்தம்
உதகம் வார்த்ததனை ஊட்டிப்பாரே.

மேற்படி மருந்துகளின் விபரம்:—

அத்திப்பட்டையும் செஞ்சந்தனமும் வகைக்கு அரைக்கழஞ்சு வீதம் ஜலம் வார்த்தரைத்துக் கலக்கி முன்போல் கொடுத்துவரவேண்டும்.

பாரப்பா ஒன்பதனில் சூலைதோன்றில்
பற்றிநிற்கும் விதனமுடன் படுத்துவாலை
நேரப்பா தேகபர தாபமுண்டாம்
நிச்சயமாய் மருந்தொன்று நிசழ்த்தக்கேளு
சூரப்பா அரசினுட பிசினோடத்தித்
தோல்கழஞ்சு வீதமெடுத் தொன்றாய்க்கூட்டி
ஆரப்பா தண்ணீர்வார்க் கரைத்துநன்றாய்
ஆக்கியே புகட்டிடநோ யகலுந்தானே

மேற்படி மருந்துகளின் விபரம்:—

அரச மரத்தின் பிசினும் அத்திப்பட்டையும் வகைக்கு அரைக்கழஞ்சு வீதம் தண்ணீர் விட்டு அரைத்துக் கலக்கி முன்போல் கொடுத்துவரவேண்டும். இவற்றிற்கும் இச்சா பத்தியம்.

தானான திங்கள்பத் ததனில்சூலே
தாவிடுகில் பண்டிதரால் தடுப்பதென்ன
ஆனாலு மறிந்தமட்டு மருந்தைப்பாரு
அகத்தியர் வல்லாதியறு நூறைப்பாரு
மானான கருவளர்க்கு மெண்ணெய்சொன்னார்
வடிபாக முறைசொன்னார் மாதந்தோறும்
தீனாக வூட்டுகின்ற முறைமைசொன்னார்
தெளிவாகப் பார்த்தறிந்து தெளிந்துசெய்யே.

---

## OUR SPECIALITIES.

### மேற்படி ரோகங்களுக்கு எமது ஆசிரமத்தில் கிடைக்கக்கூடிய மருந்துகள்.

---

## 1. கேர்ப்ப விருத்தி எண்ணெய்.

இதில் ஒரு அவுண்ஸ் மூன்று நாள் ஆறு தடவை உள்ளுக்குக் கொடுக்கலாம். கெர்ப்பம் தரித்த இரண்டாம் மாசம் முதல் ஒவ்வொரு மாசமும் ஆறு தடவை வீதம் கொடுத்துவந்தால் கெர்ப்பத்தை அழிக்கக் காரணமாயிருக்கும் கிரந்தி, சூலே முதலிய பல நோய்களை நீக்கி குழந்தை சுகமாகப் பிறக்கச்செய்யும். குழந்தை பிறந்தாலும் சிகப்பு, கரப்பன் முதலிய பல நோய்களுக்கும் நீங்கலாயிருக்கும். இச்சா பத்தியம். (அதாவது மருந்து உபயோகப்படுத்தும் நாட்களில், புளிப்பு, உறைப்பு முதலிய காரமான உணவு பதார்த்தங்களையும், தலைமுழுகுதலையும் நீக்கவேண்டும்.)

## 2. சூலெண்ணெய்.

இதில் ஒரு அவுண்ஸ் மூன்று நாள் ஆறு தடவை கொடுக்கலாம். கெர்ப்பம் தரித்த நாலாம் மாசம் முதற்கொண்டு ஒவ்வொரு மாசமும் ஆறு தடவை வீதம் கொடுத்துவந்தால், கெர்ப்பசூலை, வயற்றுத் தரிப்பு, அடிவயிற்றுக் கொழுத்து, வியர்வை, மயக்கம், வாயு, சன்னி, கைகால் சோர்வு, குத்துளைச்சல், படபடப்பு, சோகை கழிதல் முதலிய பல நோய்களை விலக்கி சிசுவழிதலைத் தடுக்கும். தலைவேதனை இருந்தால் தலையிலும் தேக வேதனைக்கு சரீரத்திலும் இத் தயிலத்தை வெளிப்பிரயோகமாகவும் உபயோகப் படுத்தலாம். இச்சா பத்தியம்.





# DISEASES OF INFANTS.

# சிசு ரோகங்கள்

சிசுக்களின் நோயானது முக்கியமாய்த் தாய் தந்தையரின் சரீர சுகத்தைத் தழுவி அவைகளின் ஜனனத்திலேயே அமைந்துள்ளதாயிருக்கின்றது. தாய் தந்தையருக்கு மேகம், அரையாப்பு, கிரந்தி, வெட்டை முதலிய நோயோடும் தாய்க்கு பெரும்பாடு, சூலை முதலிய ரோகங்களோடும் உற்பத்தியாகும் குழந்தைகள் கருவிலிருந்து அழிந்துபோவதும், அது தவறினால் பலவித நோய்களோடு பிறக்கிறதும் உண்டு. தாய் கெர்ப்ப காலத்தில் தனது சரீர சுகத்தை அசட்டை செய்து நடந்துகொள்ளுவதினாலும், மனக் கவலையினாலும் தேகத்தில் உஷ்ணம் அதிகரித்து இரத்தத்தில் அழல் மீறி கருவிலமைந்திருக்கும் குழந்தைகளுக்கு நோய்களைப் பிறப்பிக்கின்றது. பாலகருக்கு சரீரத்தில் தோன்றும் நோய்கள் ஒன்றிரண்டல்ல; பலவகையுண்டு. அவை சிகப்பு, பூப்பு, அக்கரம், பிரளி, நாய்முள், மாந்தம், வாயு, கரப்பன், வாதம், சன்னி, எச்சி, கணம், சுழியன், குழியன், சுரம், விஷபாகம், கிரகணி, கழிச்சல், கிரந்தி, மாந்தவலி, கிரிநோய், மாரி, அமரம்,

அக்கி, மசரி, கர்ணிகம், தொண்டைக்குரு, சர்த்தல், தீரை, சோகை, காமாலை, சுக்கிரன், கணை, கிரிசம் முதலிய நோய்களும் இன்னும் பலவுமாம்.

தாய் உட்கொள்ளும் பிசகான ஆகாரங்களினால் பாலில் விஷந் தங்கி அந்தப் பாலைக் குடித்துவரும் குழந்தைகளுக்கு வயிற்றில் புளிப்பும், மந்தமும் உண்டாகி பலவிதமான கிருமிகள் சேர்ந்து குடலைப் புண் படுத்தி இவ்விதமாகப் பல நோய்களையுண்டாக்குவது முண்டு. குழந்தைகளுக்குக் கொடுக்கும் கவலையற்ற ஆகாரங்களினாலும் அஜீரணமுண்டாகி அநேக வியாதிகள் உற்பவித்துவிடுகின்றன. குழந்தையின் சரீரத்தில் உஷ்ணம் மீறி தகனக்கருவிகளுக்கு பலவீனத்தை யுண்டுபண்ணி வயிற்றில் பேதிக்கட்டு தங்கி பல நோய்கள் வருவதுமுண்டு. தாய் குளிப்பதிலும் குழந்தைகளைக் குளிப்பாட்டுவதிலும் நேரிடும் கவலைத் தாழ்ச்சியினாலும் குழந்தைகளுக்கு பல நோய்கள் சம்பவிக்கின்றன. இவற்றில் சிலவற்றை இவ்விடம் சுருக்கிக் கூறுவோம்.

---

## சிகப்பு நோய்.

சிசு ரோகங்களில் சிகப்பு நோய் ஒரு பெரிய வியாதி. இந்நோயில் அநேக பிரிவுகளுண்டு. இதில் சிலவகைக் குழந்தைகளின் சரீரத்தினுட்புறத்திலுள்ள அவயவங்களைத் தாக்கி இரத்த ஓட்டத்தைத் தடை செய்து பலவிதமான கெட்ட குறிகளைக் காண்பித்து

உயிரை மாய்த்துவிடுகின்றது. ஆகையால் இது ஒரு கடினமான வியாதியாகும்.

"உரைத்திடுஞ் சிகப்பினோடு
உறுதியாங் கரப்பன்மாந்தம்
கரைத்திடும் விக்கல்கக்கல்
கபங்களுங் கணையுமக்கரம்
புரைத்திடும் பிள்ளைநோய்கள்
பிணியது கடினமாகும்
சிரத்திடும் பன்னிரண்டான
சிகப்பினைச் சிறபாய்க்கேளே."

இது சரீரத்தின் எல்லா உள்ளவையவங்களிலும் பற்றிநிற்கும் ஆகையால் சிலவகை வெளியில் நமது பார்வையில் தென்படாமலிருக்கும், சில குறி குணங் களால் மாத்திரம் அவைகளை அறியலாம். எலும் பிலும், நரம்பிலும், தசையிலும், இரத்தத்திலும், தோலிலும் இந் நோய் அமைந்திருக்கிறதாகச் சொல்லப் பட்டிருக்கிறது.

"காணப்பா இரத்தவர்ணன் அஸ்திதன்னில்
கனமான இரத்தமதில் கோழிப்பூவன்
பூணப்பா அரிசிவர்ணன் மாம்சந்தன்னில்
புகழான மாரியது மச்சைதன்னில்
கோளப்பா வில்வரியன் கரத்தில்நிற்கும்
கோபமுள்ள நாகனது தோல்மேலாகும்
சூளப்பா அரணைவர்ல் மாமிசந்தன்னில்
சுகமான வர்ணனது மூலத்தாச்சே."

பொதுவாக இது பதினெட்டுப் பிரிவுகளுள்ளதா யிருக்கின்றது. இந்த பதினெட்டுப் பிரிவுகளும் பின் வருமாறு:— (1) நல்சிகப்பு (2) கொந்தளச்சிகப்பு (3) விகாரச்சிகப்பு (4) உடலாதிச்சிகப்பு (5) கருஞ் சாதிச்சிகப்பு (6) மாரிச்சிகப்பு (7) சந்திரச்சிகப்பு (8) சன்னிச்சிகப்பு (9) அக்கினிச்சிகப்பு (10) உள்ளுரோகச்சிகப்பு (11) உணக்கல்சிகப்பு (12) கொடுங் கருஞ்சாதிச்சிகப்பு (13) தலையாரச்சிகப்பு (14) பொன்னிச்சிகப்பு (15) சூரியச்சிகப்பு (16) தாடகைச்சிகப்பு (17) ஏறுசக்கரம் (18) இறங்குசிகப்பு என்பனவாம்.

---

## இவற்றின் குணங்கள்.

(1) நல்சிகப்பு:— குழந்தை பிறந்தவுடன் குரல் கட்டி அழும். வயிற்றினுள் நோவுண்டாயிருக்கும். பேதியும் சிறுநீரும் பிடித்துக்கொள்ளும். முகத்திலும் கைகால்களிலும் துண்டு துண்டாகச் சிவந்து காணப் படும். வயிறு பொருமியிருக்கும்.

(2) கொந்தளச்சிகப்பு:— குழந்தையின் தேகத் தில் பொருத்தான இடங்களில் காசுபோல் வட்டமாகச் சிவந்து காணப்பட்டு, கழுத்து மூலவியவிடங்களில் பொள்ளிப் புண்ணுகும்; சரீரத்தில் கிரமத்துக்கு சற்று மிஞ்சி அனலுண்டாயிருக்கும்.

(3) விகாரச்சிகப்பு:— குழந்தை பால் குடி யாது ஓயாமல் அலறி அழுதுகொண்டிருக்கும், குரல் கட்டிக்கொள்ளும், தேகத்தில் காச்சலுண்டாகி மூர்ச்

சையாய் மயங்கிக்கிடக்கும். கண்திறவாது. நாவறண்டு வயிறு பொருமி வலியுண்டாகி பேதியும் சிறுநீரும் அடைத்துக்கொள்ளும். இந்நோய் சாத்தியப்படுவது அரிது.

(4) உடலாதிச்சிகப்பு:— குழந்தை பிறந்தவுடன் வயிறு பொருமி, கண் மூடி, மல ஜலம் அடைத்துக்கொள்ளும், ஓங்காரிக்கும், வயிற்றில் பச்சை நரம்புகள் காணப்படும். பால் குடியாது.

(5) கருஞ்சாதிச்சிகப்பு:— குழந்தை கண் அடைத்துக்கொண்டு அழும், பேதியும் நீரும் சிக்கிக் கொள்ளும், அடிவயிறு பாறைபோல் கனத்திருக்கும், சரீரத்தில் காசுபோல் வட்டம் வட்டமாக சிவப்பாயும், சிரங்குபோலும் காணப்படும். தோலுரியும்.

(6) மாரிச்சிகப்பு:— பிள்ளை பிறந்தவுடன் உடல் தடித்து, பிறகு உலர்ந்து வற்றி வயிறு ஊதும். பால் செமியாது. கையும் காலும் ஒடுங்கிக்கொள்ளும். பேதி போகாது.

(7) சந்திரச்சிகப்பு:— சரீரம் ஒடுங்கி மெலிந்து வயிற்றில் சகிக்கமுடியாத வேதனையுண்டாயிருக்கும். நாவில் வெந்து புண்போல் காணப்படும். பின்னால் வேறு கெட்ட குறிகள் தோன்றுமானால் இந்நோய் அசாத்தியமாகும்.

(8) சன்னிச்சிகப்பு:— பால் குடித்தவுடன் நாசி வழியாய் வரும். தொண்டையும் நாவும் வறண்டு இருமலுண்டாகி விலாப்புடைத்து கைகால்களில் அழுக்

பேதி குறிகள் மாறி மாறிப் பலவிதமாய்க் காணப்பட்டு முகமும், நகக் கண்களும், உதடுகளும் விஷம்போல் கறுக்கும். இந்நோய் அசாத்தியம்.

(9) அக்கினிச்சிகப்பு:— இருமலோடு மட்டற்ற காச்சலுண்டாகி பால் குடியாமலிருக்கும். ஒரு வேளை குடித்தாலும் உடனே சர்த்திக்கும். தாகம் மீறி நாவறளும். குழந்தை தாயின் கையில் தங்காது, இந்நோய் எட்டு நாளைக்குள் கொன்றுவிடும்.

(10) உள்ளுரோகச்சிகப்பு:— வாய்க்குள் முள் போல் முளைத்து நுனியில் சிவந்து காணப்படும். சிறு நீர் கள்ளின் நிறமாயிருக்கும். வயிற்றிரைச்சலும், கழிச்சலுமுண்டாயிருக்கும். துள்ளலும் காச்சலும் இருந்தாற்போல குழந்தை துடிக்கும். வாயில் நீர் வடியும். இந்நோயில் மீளுவது அரிது.

(11) உணக்கல்சிகப்பு:— சரீரத்தில் ஒருவிதமான சிகப்பின் தோற்றங்களும் காணப்படாமல் வர வர மெலிந்து சக்தி குன்றிப்போகும்.

(12) கோடுங்கருஞ்சாதிச்சிகப்பு:— சரீரம் முழுவதிலும் கடும் நீல நிறமும் வயிற்றில் பச்சை நரம்புகளும் காணப்படும். பேதி நீர் முதலியவைகள் இரத்தம் போலிருக்கும்.

(13) தலையாரச்சிகப்பு:— கன்னம் குழிந்து தலை வீங்கி மல ஜலம் பிடித்து குழந்தை மயக்கமாகி இருமல், இழைப்பு, மேல்மூச்சு இவைகள் உண்டாகும். இந்நோய் மெத்தக் கடினம்.

(14) பொன்னிச்சிகப்பு:- சரீரமெல்லாம் நோவுண்டாகி சிறு காச்சலோடு தலையிலும் உடலிலும் பெரிய பெரிய பருக்கள்போல் காணப்படும்.

(15) சூரியசிகப்பு:— பிள்ளை பிறந்தவுடன் முதலில் சாதாரணமான சிகப்பைப்போல் காணப்பட்டு ஒரு வாரம் கழிந்த பிறகு சூரியனின் கிரணங்கள் போல தேகத்தில் பல அடையாளங்கள் தோன்றும். கண் மயங்கி வாயில் நுரையும் பதையுமுண்டாகும். மரும ஸ்தானங்களில் நீர்க்கட்டுகள் உண்டாகி சில பழுத்து உடையும்; சில கருண்டு கருண்டு கனத்திருக்கும். மயக்கமும் மேல்மூச்சுமுண்டாகும். இந் நோய் பதினெட்டு கழிப்பது அரிது.

(16) தாடகைச்சிகப்பு:— குழந்தையின் சரீரத்தில் பொருத்துகள்தோறும் நீர் கெட்டுகளுண்டாகும். விலாப் பக்கத்தில் நீண்ட படுவன் கட்டும். பழுத்து உடைந்து கசிந்துகொண்டிருக்கும், பிறகு சரீர முழுவதிலும் இவ்வாறு தோன்றி காச்சலுண்டாகும். காச்சலின் கொடுமையினல் கண் மூடிக்கொள்ளும். வயிறு இரைந்து பேதி இளகிப்போய்க்கொண்டிருந்து மந்தப்படும். இந்நோய் மிகக் கொடியது.

(17) ஏறுசக்கரம்:— இரண்டு கால்களிலும் கரங்களிலும் வீக்கம் ஆரம்பித்து வயிற்றுக்குள் நோவுண்டாகி குழந்தை பாலுண்ணாது. காச்சல், ஜலதோஷம், பேதி நீர் பிடித்தம் இவைகளின் தோற்றத்தோடு சரீர முழுவதும் வீங்கி, கபம், வாந்தி முதலிய குணங்க

ளுண்டாகி பல அவஸ்தைகளையும் அடையும். இந்நோய் இரண்டு மாசங்களுக்குப் பிறகு சுகமாகும்.

(18) இறங்குச்சிகப்பு:— குழந்தை நித்திரை செய்வதுபோல் மயங்கிக் கிடந்து பால் வெறுத்திருக்கும். தலையிலும், கன்னங்களிலும், கைகளிலும் நீருண்டாகி அந்த நீர் வர வர கீழிறங்கி இடுப்பின் கீழ் வந்து கனத்துக்கொள்ளும். அது ஆந்திர நீர்போல் காணப்பட்டு சிலநாள் கீழிறங்கி சிலநாள் மேலே ஏறி முதுகிலும் சுற்றி புறங் கைகளிலும் புறங் கால்களிலும் சென்று இவ்விதமாகப் பல கஷ்டங்களையுண்டாக்கும். இந்நோய் எண்பது நாட்கள் சென்றபிறகு சுகமாகும்.

மேற்கூறிய பதினெட்டு சிகப்புகளும் பொதுவான ரோகங்களாகும். இவை தவிர வேறு சில சிகப்புகளும் குழந்தைகளுக்கு உண்டாவதுண்டு. அவற்றில் சிலவற்றையும் இங்கே எடுத்துக்காட்டுவோம். சந்திர சிகப்பு நாலு பிரிவுகளுடையது: அவையாவன:— (1) வாதசந்திரன் (2) பித்தசந்திரன் (3) சேஷ்பசந்திரன் (4) தொந்தசந்திரன்.

---

## இவற்றின் குணங்கள்.

(1) வாதசந்திரன்:— இந்த சிகப்பு குழந்தைகளுக்கு வரும்போது முந்தின நாள் இரவு குழந்தை நன்ருக அழும், அடுத்த நாள் முதுகில் இடது பக்கமாக மூன்று வட்டங்கள் காணப்படும். அப்பால்

அது விஷத்தைப்போல் படர்ந்தேறி சரீரத்தின் பல இடங்களில் சுற்றிக்கொள்ளும். பிள்ளை நடுங்கி விறைத்து அழும். இருமலும் கபமும் இலேசாகக் காணப்படும். இதற்கு உடனே மருந்து செய்யவேண்டும்.

(2) பித்தசந்திரன்:— இது வரும்போது உந்தியிலே தாமரைப் பூவின் நிறத்தில் ஒரு வட்டம் காணப்பட்டு சீக்கிரத்துக்குள்ளாக இடுப்பைச் சுற்றிக்கொண்டு கீழ் இறங்கி மேலும் ஏறும். குழந்தை துடித்து அழும். சுரம் காயும், சர்த்திக்கும். பாலுண்ணாது. இந்த நோய்க்கு மிகவும் துரிதத்தில் ஔஷதங்கள் செய்ய வேண்டும்.

(3) சேஷ்பசந்திரன்:— இந்த நோய் வருமானால் மார்பிலே சிவந்த வட்டங்கள் காணப்படும். குழந்தையின் இரத்தாசயங்களையும் ஈரலையும் தாக்கி உள்ளே அடங்கிக்கொண்டு சுரம் காட்டி தேகத்தை உருக்கி மல ஜலங்களை இரத்தமாகக் கழித்து வியர்வை தோற்றி கபமுண்டாக்கி விலா இழுத்து சுவாசம் காட்டும். இது ஏழாம் நாளில் குழந்தையைக் கொன்று விடும்.

(4) தோந்தசந்திரன்:— இந்நோய் குழந்தைக்கு வாய்ப்புண்ணோடு சுரத்தைக் காட்டும். குழந்தை கோபம் கொண்டதுபோல் அழும், பாலுண்ணாது. நடு முதுகில் வட்டமாய் சிகப்புத் தோன்றி நாகத்தின் விஷம்போல் நீல நிறத்துடன் படர்ந்தேறி கழுத்தைச் சுற்றிக்கொண்டு பல கெட்ட குணங்களைக் காட்டும். இந்நோய் மகா கொடிது. (அசாத்தியம்)

மேலும் உள்ரோகச்சிகட்பு எட்டு வகையுண்டு. அவையாவெனில் (1) இரத்தவர்ணன் (2) கோழிப்பூவன் (3) அரிச்சிகப்பு (4) மாரிச்சிகப்பு (5) அரணை வால்சிகப்பு (6) வில்வரியன்சிகப்பு (7) நாகன்சிகப்பு (8) வர்ணன்சிகப்பு என்பவைகளே. இவற்றில் வில் வரியன் சிகப்புக்கு பின்வரும் குணங்கள் உண்டு.

தலைக்குநாள் பனியுங்காணும்
    தலைவலி மிகுதியாகும்
நிலத்திடக் காயுப்பிள்ளை
    நினைவுறு பாதம்பற்றிச்
சிலத்திடச் சிவந்துகாணும்
    சிக்கெனப் படர்ந்தேறும்
குலத்திட அரைக்குமட்டும்
    கூறுடன் படர்ந்தபோது.

படர்ந்துடன் சுற்றிநிற்க
    பையவே மலத்தைக்கட்டும்
கடந்துடன் மேலேபொங்கும்
    கபம்வரும் முன்னேகேளு
குடந்துடன் சிகிற்சைசெய்யில்
    குணம்வரும் இதற்குமேலே
சிடந்துடன் ஏறுமாகில்
    சீருடன் மரணமென்றே.

அரணைவால் சிகட்பின் குணங்கள்.

உந்தியில் சிவந்துவட்டம்
    உறுநல்ல பிளாசின்பூபோல்
சிந்தையாய் மேலேபொங்கி
    சிறுவனும்தொப்பிள் சுற்றிச்சுற்றி

பந்தியாய் கீழேநோக்கி
படர்ந்திடும் கபமும்உண்டாம்
நொந்துடன் கரையும்பிள்ளை
நொய்யவே சுரமுங்காட்டும்.

காட்டிடும் வயிறுப் ஊதி
கால்உச்சி பிடரிகைகள்
ஊட்டிடக் குளிர்ச்சியாகும்
உறுகப சுவாசமாகும்
நாட்டியே மூன்றுக்குள்ளே
நமனிடம் சேரும்பிள்ளை
வாட்டிய அரணை வாலின்
வகுப்பது கண்டுகொள்ளே.

நாகன்சிகப்பின் குணங்கள்.

படந்தனில் புள்ளிவட்டம்
பார்கனல் சிகப்பெனபோல்
சடமதில் கண்டபின்னே
சரசர பனியுமுண்டாம்
இடம்பட வந்துவீங்கி
இருமிடும் மேலேநோக்கும்
குடம்பட சிரசுமட்டும்
கூறுடன் வலித்துஏறும்.

ஏறியே யங்கேயங்கே
இருந்திடும் வட்டம்போலே
கூறியே மலமுங்கட்டும்
குழந்தையின் சிறுநீர்வெம்பும்

பாறியே மருந்துசெய்யில்
பழிசெய்யா துடனேமீளும்
வேறியே பதினெட்டாம்நாள்
வேதனே தீர்ந்துமாறும்.

---

GENERAL TREATMENT FOR ALL VARIETIES.

## சிகிற்சை.

1. இலகுவாகக் காணப்படும் சிகப்புகளுக்கு முதலில், வெண்குன்றியிலே, நல்துளசியிலே, வெற்றிலே, ஈருள்ளி இவைகளே வகைக்கு சமனுக எடுத்து சதைத்துப் பிழிந்த சாற்றில் ஒரு சிறு கறண்டியளவு எடுத்து அதில் ஒரு அரிசி எடை கோரோசனே உரைத்துக் குழந்தைக்குக் கொடுக்கலாம். (இச்சாபத்தியம்)

2. செஞ்சந்தனம், கருஞ்சூரைப்பட்டை, அமுக்கூரம், கடுகுரோகணி, அதிமதுரம் இவைகளே வகைக்கு அரைக்கழஞ்சு வீதம் கஷாயஞ்செய்து தினம் இரண்டு தடவை முன்போல கோரோசனே உரைத்து குழந்தைக்குக் கொடுக்கலாம். (இச்சாபத்தியம்)

3. நல்துளசி சமூலம், செம்பொன்நெருஞ்சி சமூலம், ஈருள்ளி, கெருடக்கொடிவேர், வெள்ளறுகு, நத்தசூரி வேர், சாரணே வேர், தெற்றி சமூலம், கருஞ்சூரப்பட்டை, பூவரசம்பட்டை, மாயக்காய், நல்சீரகம், கருஞ்சீரகம், கார்கோல் அரிசி வகைக்கு கழஞ்சு—1 கொத்தமல்லி, திரிசாதி வகைக்கு கழஞ்சு—$\frac{1}{2}$ இந்த

வீதம் மருந்துகள் சேர்த்து இரண்டு படித் தண்ணீரில் கஷாயஞ்செய்து கால் படியாக்கி தினம் இரண்டு வேளை ஒவ்வொரு தடவையும் கால் மஞ்சாடி நிறை கோரோசனை உரைத்துத் தாய்க்கும் குழந்தைக்கும் கொடுத்துவரலாம்.

4. ஆட்டின்பால் தான்கறந்து
அதுவேசிலை வடிகொண்டு
நாட்டிக்காய்ந்து அரிஞடை
நன்றாய்த்தள்ளிச் சங்களவு
காட்டில்கருஞ் சூரைப்பட்டை
காசினளவு முதல்தங்கம்
கூட்டிநன்றா யுரைத்தபின்பு
கோரோசனையும் அரிசியெடையே.

அரிசியெடையெல் லாஞ்சேர்த்து
அன்பாயுரைத்துத் தானூட்டு
பிரியமுடனே மூன்றுநாள்
பிசகாதளித்து வந்திடுகில்
கடியசிகப்பு உடலுலர்தல்
கடுத்தசன்னி தோஷமுடன்
உரியதோஷம் பதினெட்டும்
உடனேதீரும் பத்தியமே.
(இம்மருந்துகளுக்குக் கடின பத்தியம்).

5. சரீரத்தில் காணும் நீர்க்கட்டுகளுக்கு கருஞ் சூரைப்பட்டையும், அமுக்கூரமும், கோரங்கிழங்கும் வகைக்கு சமனாய்க் காடித்தண்ணீரில் அரைத்து வெதுப்பிப் பூசவேண்டும்.

## OUR OWN PREPARATIONS.

## ஷை நோய்களுக்கு எமது சிசு வைத்திய ஆசிரமத்தில் கிடைக்கக்கூடிய மருந்துகள்.

### 1. சிகப்புத் தைலம்.

இதில் அரை அவுண்ஸ் மூன்று நாள் ஆறு நேரமாகக் குழந்தைகளுக்கு உள்ளுக்குக் கொடுக்கலாம்.

### 2. ரோஜனுதித் தைலம்.

அரை அவுண்ஸ் மூன்று நாள் ஆறு நேரமாக எல்லாவித சிகப்புகளுக்கும் கொடுக்கலாம். இம்மருந்தைக் குழந்தைக்கு தனியாகவாவது முலைப்பாலில் சேர்த்தாவது கொடுக்கலாம். அல்லது நோய் பெலமாகக் காணப்பட்டால் முன்சொல்லியிருக்கும் அனுபானங்கள் ஒன்றில் சேர்த்தும் கொடுக்கலாம். சரீரத்தில் தணப்புகள், நீர்க்கட்டுகள் முதலியவற்றோடு தோன்றும் சிகப்புகளுக்கு இம்மருந்து நல்லது. இந்தத் தைலத்தை நோய் நன்றாக மாறுகிறதுவரையிலும் ஒழுங்காகக் கொடுத்துவரவேண்டும்.

### 3. தேற்றிமூல நெய்.

இம்மருந்தில் அரை அவுண்ஸ் மூன்று நாள் ஆறு நேரமாக குழந்தைக்குக் கொடுக்கலாம். வயிற்று வேதனை, வாந்தி இவைகளோடிருக்கும் கடினமான சிகப்புகளுக்கு இம்மருந்து உபயோகமானது.

### 4. கபகேசரித் தைலம்.

சிகப்பு நோயில் கபம், இருமல், இழைப்பு காணப்பட்டால் அரையவுன்ஸ் ரோஜனுநித் தைலத்தோடாவது அரையவுன்ஸ் தெற்றிமூல நெய்யோடாவது காலவுன்ஸ் கபகேசரித் தைலம் கலந்து ஒன்பது நேரமாகக் கொடுக்கவேண்டும்.

### 5. புல்லுருவி மாத்திரை.

சிகப்பு நோயில் பேதி இளக்கம், இரத்தம், சளி காணப்பட்டால் தெற்றிமூல நெய்யை ஒழுங்காகக் கொடுத்துவருவதோடு புல்லுருவி மாத்திரையையும் தினம் இரண்டு தடவை ஒரு நேரத்துக்கு ஒவ்வொன்றாக ஆட்டின் பாலில் உரைத்துக் கொடுக்க வேண்டும்.

பத்தியம். ஔஷதப் பிரயோகம் முடியுமட்டும் தாயும் குழந்தையும் தலை குளிக்கக்கூடாது. புளிப்பு பதார்த்தங்கள், பழைய சாதம் இவைகளை நீக்க வேண்டும்.



## பூப்பு நோய்.

இது சிகப்பு ரோகத்தைச் சார்ந்து உண்டாகிற ஒரு நோய். இந்நோய் குழந்தைகளுக்கு நாவிலும், உள்நாக்கிலும் வயிற்றுக்குள்ளிருந்து மூலம்வரையிலும்

ஈரலிலும் சேர்ந்து உண்டாகிறது. இதில் ஆறு பிரிவுகள் உண்டு. அவை (1) கிரந்திப்பூப்பு (2) குமாரன் பூப்பு (3) நாவில்முள்பூப்பு (4) பவுந்திரப்பூப்பு (5) நாகன்பூப்பு (6) சூலைப்பூப்பு.

## இவற்றின் குணங்கள்.

(1) கிரந்திப்பூப்பு:— நாவில் வட்டமாக வெண்ணிறத்தில் புண்போல் காணப்படும். குடலிலும் இவ்விதமாயிருக்கும்.

(2) குமாரன்பூப்பு:- நாவில் புண்ணாகி குழந்தை பாலுண்ணாது. நாசியில் நீர் வடியும். குரல் கட்டும். இருமலும் வாந்தியுமிருக்கும்.

(3) நாவில்முள்பூப்பு:— நாவில் முள்போல் முளைத்திருக்கும். பால் குடியாது. வாயில் வெண்ணுரைகள் தள்ளும். கண் திறவாது. சத்தம் கனத்திருக்கும். சரீரத்தில் மணல்போல் தினவு தோன்றி குழந்தை மெலியும்.

(4) பவுந்திரப்பூப்பு:— மூலத்தில் புண்ணாகி மலம் சிறுகச் சிறுகக் கழியும். நாவிலும் உள்நாக்கிலும் புண் காணப்படும்.

(5) நாகன்பூப்பு:— ஈரலில் புண்ணுண்டாகி கபம் மேலிட்டு சரீரம் முழுவதும் தளர்ச்சையாகி உடல் மெலிந்து கண்சொருகி கொன்றுவிடும்.

(6) சூலைப்பூப்பு:— சரீரம் கனத்திருக்கும். புறங்காலில் காசுபோல் வட்டமாக அடர்ந்து புண்ணு கும். கண்விழி சுழித்துவாங்கும். மாலையில் காச்சல் காணும். வாந்தியுண்டாகி இழைக்கும். தேகத்தில் நாற்றமிருக்கும். வயிற்றுக் கழிச்சலும் சீதமும் உண்டாகி கைகால் குளிர்ந்து வியர்வையாகி முறுக்கியமும். மயக்கமிருக்கும். இந்நோயும் அசாத்தியம்.

## GENERAL TREATMENT.

### சிகிற்சை.

அதிமதுரம், சாஸ்திரபேதி, கருஞ்சூரைப்பட்டை, செஞ்சந்தனம், பூலா விருக்ஷம், மாயக்காய், கடுகுரோகணி, குங்குமப்பூ, தங்கம் இவைகளைக் குறவன் மூலிச் சாற்றில் உரைத்து குழந்தைக்குக் கொடுக்கலாம்.

---

## OUR SPECIALITIES.

மேற்படி ரோகங்களுக்கு எமது ஆசிரமத்தில்
கிடைக்கக்கூடிய மருந்துகள்.

1. ரோஜனுதித் தைலம் ஒழுங்காய்க் கொடுத்து வரவேண்டும். (பக்கம் 42)

2. மலர்நீறு:— இந்தப் பொடியைத் தேனில் குழைத்து நாவில் தடவிவரவேண்டும்.





# பிரளி நோய்.

இதன் வரலாறு:—

சொல்லிய பிரளிதானும்
    தொடர்ந்திடும் விபரங்கேளு
மெல்லியர் அருந்துமந்த
    விஷமுறு பதார்த்தத்தாலும்
கல்லக மெண்ணெய்தண்ணீர்
    கலந்துறும் விஷத்தினாலும்
தொல்லைசேர் முலையருந்தில்
    தொடர்விஷ மடருமென்னே.

பொது நிதானத்தின்படி இந்நோயும் பதினெட்டுப் பிரிவுகளுடையது. இப் பதினெட்டுக்கும் பெயர்கள்:— (1) வாயுப் பிரளி (2) அக்கினிப்பிரளி (3) பச்சைப் பிரளி (4) சுரப்பிரளி (5) நீர்ப்பிரளி (6) துட்டுப் பிரளி (7) முறுக்கல்பிரளி (8) திரைப்பிரளி (9) விஷப் பிரளி (10) தொந்தப்பிரளி (11) சுவாசகாசப்பிரளி (12) அதிசாரப்பிரளி (13) விமலகண்டப்பிரளி (14) மஞ்சள்பிரளி (15) முக்கல்பிரளி (16) இளைப்புப் பிரளி (17) விக்கல்பிரளி (18) நடுக்கல்பிரளி.

(1) வாயுப்பிரளி:— குழந்தைக்கு பேதி சரியாய்ப் போகாமல் கொஞ்சங் கொஞ்சமாகப் போய்க் கொண்டிருக்கும். காச்சலுண்டாகும். பிள்ளை துடித்து அழும். கண் உருட்டிப் பார்க்கும்.

(2) அக்கினிப்பிரளி:— இருமலோடு ஆரம்பித்து அடிக்கடி குழந்தை அழுதுகொண்டிருக்கும். பால் குடித்தால் உடனே வாந்தியெடுக்கும். பேதி இறுகிப் போகும். சரீரம் வெளிறிக் காணும். துர்நாற்றம் வீசும்.

(3) பச்சைப்பிரளி:— குழந்தைக்கு அடிவயிறு வலித்து இரைந்து பச்சை நிறமாக அடிக்கடி பேதியாகும். இலேசாகக் காச்சல் காணும். குழந்தை கையில் தங்காது.

(4) சுரப்பிரளி:— வயிற்றுப் பொருமல் உண்டாகி குடலைப் புரட்டி வாந்தியெடுக்கும். காச்சல் அதிகமாயிருக்கும். பால் குடியாமல் அலறியழும். சிறுநீர் போகாது. கண் சுழன்று பார்க்கும். முகம் பிரகாசிக்கும்.

(5) நீர்ப்பிரளி:— அதிகமாய் சுரங் காய்ந்து தேகத்தில் காந்தலுண்டாகும். சரீரம் வீங்கி ஊதிக் கொள்ளும். கண் விழியாது. கபம் இளகி சுவாச முட்டு உண்டாகும். இது கொடிய நோய்.

(6) துட்டுப்பிரளி:— வயிற்றில் பேதிக்கெட்டு உண்டாகி வயிறு நொந்து குழந்தை பால் குடியாமல் தண்ணீரை விரும்பும். உடல் தளர்ந்து வெளிறிப் போகும். சுரமுண்டாயிருக்கும்.

(7) முறுக்கல்பிரளி:— வயிறு பாறைபோல் ஊதி பேதிபோகாமல் கண் உருட்டி விழிக்கும். கை

கால் முறுக்கி வலிக்கும். வாயில் நுரையுண்டாகும். இந்நோய் தீர்ந்துகொள்வது அரிது.

(8) தீரைப்பிரளி:— வயிற்றுக்குள் இரை யெழும்பி வயிறு இரைந்து வாந்தியெடுத்து பேதியா கும். இரவில் நித்திரையின்றி அலறி அழும். இழைப் பும் காச்சலுமுண்டாகும்.

(9) விஷப்பிரளி:— வியர்வை ஓங்காரம் முத லியவற்றுடன் உள்ளம் காய்ந்து மயங்கி தலை நடுக்க முண்டாகும். பேதி கறுப்பாகவும், சிறுநீர் கள்ளின் நிறமாகவும் போகும். இந்நோய் அசாத்தியம்.

(10) தோந்தப்பிரளி:— வயிறு பொருமி இரைப்புண்டாகி குடல் புரட்டி வாந்தியெடுத்து மலம் அடைக்கும். பால் குடியாமல் வாயுலர்ந்து சக்தி குன் றும். கண் சுழலும். நாசியில் நீர் வடியும். முக்கலும் இளைப்புமுண்டாகும்.

(11) சுவாசகாசப்பிரளி:— வயிற்றுக்குள் கொழுத்தும் வலியுமுண்டாகி வயிறு பங்கமாகி புளிப் போடு பேதி கழியும். பெருமூச்சு, தலை நடுக்கம், சுரம், குளிர், தாகமுண்டாகும். குரல் கட்டும். பெலவீனத் தோடு இளைக்கும். இந்நோய் அசாத்தியம்.

(12) அதிசாரப்பிரளி:— சுரம் காய்ந்து இரும லுண்டாகி ஈரல், நெஞ்சு முதலியவற்றில் நோவுண்டா கும். சளியோடும் இரத்தத்தோடும் பேதி போகும். பால் குடியாமல் அலறி அழும். கைகால்கள் அழுக்

கேறும். முகம் பளபளப்பாக மினுங்கும். இந்நோய் மகா கொடியது.

(13) விமலகண்டப்பிரளி:- குழந்தைக்கு முக்கல், இரைப்பு, கனைப்பு முதலியவற்றோடு கையும் காலும் திருகி முறுக்கி கண் உருட்டி வலியுண்டாகி வாயில் நீரும் பதையும் காணப்படும். இந்நோய் விழித்திருக்கக் கொன்றுவிடும்.

(14) மஞ்சள்பிரளி:— கண்களும், உதடுகளும், பேதியும், சிறுநீரும் மஞ்சள் நிறமாகக் காணப்பட்டு குடிக்கிற பால் வாந்தியெடுத்துக்கொண்டிருக்கும்.

(15) முக்கல்பிரளி:— மலமும் நீரும் போகாமல் வியர்வை, காச்சல், முக்கல், திகமுட்டு இவைகளோடு மூக்கில் நீர் வடியும். சுவாசம் இழுத்து வாங்கும். இந்நோய் கொடியது.

(16) இழைப்புப்பிரளி:— இருமலும் உரத்த காச்சலும் சரீர நோவும் உண்டாகி, பேதி அடைக்கும். பால் குடியாது. இழைக்கும்.

(17) விக்கல்பிரளி:— அடங்காத விக்கல், கக்கல், சுரம், வியர்வை, தாகம், பொருமல், வயிற்றுப் போக்கு, வீக்கம், பெருமூச்சு இவற்றுடன் கைகால் குளிரும். அரைக் கண்ணுடன் நித்திரை செய்யும். பால் குடியாது. இந்நோய் மெத்தக் கடினம்.

(18) நடுக்கல்பிரளி:— சரீரத்தில் நடுக்கமுண்டாகி வயிறு நோகும். பால் குடித்தால் வாந்தி யெடுக்

கும். விட்டுவிட்டுக் காச்சல் காணும். கண் சிவக்கும். அதிகமாக அழும்.

## GENERAL TREATMENT.

### சிகிற்சை.

(1) பிரண்டை இலையும், நரிப்பயற்றின் இலையும், ஈருள்ளியும், வாட்டிப் புழிந்த சாற்றில் ஒரு சிறு கரண்டியளவெடுத்து அதில் ஒரு அரிசியெடை கோரோசனை உரைத்துக் குழந்தைக்குக் கொடுத்துவரலாம்.

(2) கருவேப்பிலை நெட்டு, வேப்பின் நெட்டு, முசுட்டைத்தண்டு, மாநெட்டு, இஞ்சிப்புல் கிழங்கு, முளை இலை, புறத்தி மண்டை, முருங்கைப்பூ வகைக்கு அரைக் கழஞ்சு வீதமும், வெள்ளுள்ளி, ஓமம், சுக்கு, மிளகு, திப்பிலி, வெந்தயம், சீரகம் இம்மருந்துகள் வகைக்கு கால் கழஞ்சு வீதமும் ஒவ்வொன்றும் தனித் தனியே இளவறுப்பாய் வறுத்துக் கஷாயஞ்செய்து காலையிலும் மாலையிலுமாக இரண்டு தடவை வீதம் குழந்தைக்குக் கொடுத்துவரலாம்.

## OUR SPECIALITIES.

மேற்படி ரோகங்களுக்கு எமது ஆசிரமத்தில்
கிடைக்கக்கூடிய மருந்துகள்.

### 1. மல்லிகை மலர்த் தைலம்.

இதில் அரை அவுண்ஸ் மூன்று நாள் ஆறு தடவை எல்லாப் பிரளிகளுக்கும் கொடுத்துவரலாம்.

## 2. கலம்பலாதித் தைலம்.

இதை முன் அளவுப்படி குழந்தைக்குக் கொடுத்து வந்தால் வயிற்றுப் பெருமலோடு உண்டாகும் பிரளி நோய்களுக்கு மெத்தப் பிரயோஜனத்தைக் கொடுக்கும்.

## 3. சின்னித் தைலம்.

இம்மருந்தும் முன் அளவுப்படி கொடுத்துவந்தால் எல்லா வகைப் பிரளிகளுக்கும், முக்கியமாய் வயிற்று வேதனையோடு உண்டாகிற பிரளிகளுக்கும் நல்லது.

## 4. கபகேசரித் தைலம்.

மேற்படி நோய்களில் உரத்த காச்சல், இருமல், இழைப்பு முதலியவைகள் தோன்றினால் முன் தைலங்கள் ஏதாவது ஒன்றில் அரை அவுன்ஸுக்கு கால் அவுண்ஸ் கபகேசரித் தைலம் கலந்து ஒன்பது நேரமாகக் கொடுக்கவேண்டும்.

## 5. விரோசன மாத்திரை.

முன் தைலங்கள் கொடுத்தும் பேதி போகாமலிருக்கக்கூடிய நோய்களுக்கு இம்மாத்திரையில் ஒன்று முலைப்பாலில் உரைத்துக் கொடுக்கவேண்டும். ஒரு மாசத்திற்குமேல் இரண்டு மாசங்களுக்குக் கீழுள்ள குழந்தைகளுக்கு அரை மாத்திரை கொடுக்கலாம்.

## 6. உத்தமதாளித் தைலம்.

பேதி போகாமலிருக்கும் பிள்ளைகளுக்கு இத்தைலத்தில் கால் அவுன்ஸ் ஆறு நேரமாகக் கொடுக்கலாம்.

பத்தியம்:— புளிப்பு பதார்த்தங்கள், தலை ஸ்நானம் முதலியவற்றை நீக்கவேண்டும்.




இலகுவில் ஜீரணிக்கக்கூடாத பதார்த்தங்களை தாயும் குழந்தையும் சாப்பிடுவதினாலும் மலக்கட்டினாலும் இந்நோய் உண்டாகிறது. சாதாரணமாக இந்நோயில் பதினெட்டுப் பிரிவுகளுண்டு. அவை பின் பின்வருமாறு:—

சாற்றுகிறேன் வாதமாந்தம் பித்தமாந்தம்
தயவான சிலேற்பனத்தின் மாந்தந்தானும்
ஊற்றுகிறேன் பால்மாந்தம் நீரைமாந்தம்
ஊதுகின்ற மாந்தமொடு பிரளிமாந்தம்
சீற்றமுள்ள விஷமாந்தம் தொந்தமாந்தம்
சொல்பெரிய நீர்மாந்தம் தட்டுமாந்தம்
ஏற்றமுள்ள பேர்மாந்தம் கட்டுமாந்தம்
இயல்பான சுழிமாந்தம் வீக்கமாமே.

வீக்கமொடு மகாதோஷ மாந்தந்தானும்
விளம்புகிறேன் குடோரியொடு வீச்சுமாந்தம்

பக்கமுறு மாந்ததொகை பதினெட்டுந்தான்
பண்புடைய பாலகர்க்கு வந்தணுகில்
ஆக்கமுடன் சாத்தியமும் அசாத்தியமும்
ஆராய்ந்து கண்டறிந்து ஔஷதங்கள்
நீக்கிவிடச் சொல்லுகிறேன் பண்டிதர்க்கு
நிகழ்வாத மாந்தகுண நிதானங்கேளே.

## இவற்றின் குணங்கள்.

(1) வாதமாந்தம்:— குழந்தையின் வயிறு பொருமி பலவிதமாகப் பேதி போகும். உடலில் வலியும் வியர்வையு முண்டாகும். சீறி அழும். அடிக்கடி கொட்டாவி விடும்.

(2) பித்தமாந்தம்:— வாந்தியும் பேதியுமுண்டாகி குழந்தை மூர்ச்சையாயிருக்கும். குரல் கட்டிக் கொள்ளும். வியர்வையும் குளிர்ச்சியும் அதிகமாயிருக்கும். மேனியெல்லாம் மஞ்சள் நிறமாகத் தோன்றும்.

(3) சிலேற்பனமாந்தம்:— உடல் சிலிர்த்துக் குளிரும். நாவுலர்ந்து வெளிறிப்போகும். நெஞ்சில் கபங் கட்டும். வயிறு பொருமி ஏப்பமிடும். மயக்கமுண்டாகும். சரீரம் நோவாகும். வயிறு கழியும்.

(4) பால்மாந்தம்:— வயிறு பொருமி இரைப்புண்டாகி வேப்பின் பூபோலவும் புளிப்போடு பலவிதமாகவும் பேதியாதம் பால் குடித்தவுடன் வாந்தியெடுக்கும் தாகிக்கும். உச்சியுங் கண்ணுங் குழிந்திருக்கும் மயக்கமுண்டாகும்.

(5) இரைமாந்தம்:— வயிறு இரைந்து வாய்நீர் சுழற்றி ஓங்காரமுண்டாகும். பேதி போகாமல் வயிறு விம்மி உடல் களைப்புற்றிருக்கும்.

(6) பிரளிமாந்தம்:— குழந்தையின் வயிற்றில் காணப்படும் நரம்புகளும் பேதியும் பச்சை நிறமாயிருக்கும். சில சமயங்களில் வயிறு இரைந்து பேதியாவதும் சில சமயங்களில் பேதி போகாமலிருத்தலுமுண்டு. வயிறுகடியும் இழைப்புமுண்டாகும்.

(7) ஊதுமாந்தம்:- பேதிக்கட்டுண்டாகி வயிறு பொருமி, சுரம், வியர்வை, மயக்கம், தளர்ச்சையுண்டாகும். இடித்த மாப்போலவும், கெட்ட நாற்றத்தோடும் பேதி போகும்.

(8) விஷமாந்தம்:- மலம் சிக்கி வயிறு இரைந்து பேதி திரைந்து திரைந்து கழியும். சுரம் உரத்துக் காயும். இடுப்பின் கீழ் குளிர்ந்திருக்கும். வியர்வையும் வாந்தியும் அதிகமாயிருக்கும். சரீரம் மெலிவாகி வரும். காலில் வீக்கமுண்டாகும். சில சமயங்களில் பேதி அடைத்துக்கொள்ளும். வியர்வையுங் குளிர்ச்சியுமுண்டாகி தேகத்தில் வீக்கமுண்டாகும். இந்நோய் வர வர குழந்தைக்கு பலவீனத்தை யுண்டுபண்ணி ஔஷதங்களுக்கு அமைந்துகொள்ளாது.

(9) போதுமாந்தம்:— மலஜல மடைத்து வயிறு வலிக்கும். குழந்தை அலறி அழுது பால் குடியாது. பரந்து விழித்துப் பார்க்கும்.

(10) நீர்மாந்தம்:— உடல் மெலிந்து குளிர்ந்து வாய் நீர் சுழற்றி வாந்தியுண்டாகும். தேகம் சிலிர்த்து வரும். பால் குடியாது. தூங்கி விழித்துச் சிரிக்கும். சரீரமும் கால்களும் தினவெடுக்கும். முகம் மினுங்கும். தலை வலிக்கும். நீர் கடுத்து மலம் சிறுத்து இறங்கும்.

(11) துட்டுமாந்தம்:— சுரங் காயும். தலை வலிக்கும். வயிறு நொந்தழும். பேதி அரைத்துக் கரைத்த மாப்போல் வயிற்று இரைச்சலுடன் கழியும். அரைக்கண் மூடி நித்திரை செய்யும். குழந்தை மிகத் தளர்ந்து உலர்ந்து குழைந்துபோகும்.

(12) பேர்மாந்தம்:— சரீரம் மெலிந்து வற்றி வயிறு பொருமி உரத்த காச்சலோடு மலம் கழிந்து விட்டுவிட் டடைத்துக்கொள்ளும். கடுப்பு, சீதம், புறங்கால் வீக்கம் இவைகள் உண்டாகும். இம்மாந் தம் அசாத்தியம்.

(13) கட்டுமாந்தம்:— வயிறு இரைந்து கொழுத் தும் வலியுமுண்டாகி, மயங்கி, மலம் சிக்கிக் கொஞ்சங் கொஞ்சமாகப் பேதி போய்க்கொண்டிருக்கும். இடைக் கிடையே பால் குடிக்கும். தூக்கம்போல் மயங்கிக் கிடக்கும். இருமல், வியர்வை, சுரம், கொட்டாவி இவைகளுண்டாகும்.

(14) சுழிஇறைப்புமாந்தம்:— சுரம் காய்ந்து இரைப்பு, சுவாசம், விக்கல், கக்கல் இவைகள் காணும். பால் குடியாது. நித்திரை செய்யாது. வேறு கெட்ட குணங்களுமுண்டாகும்.

(15) விஷவீக்கமாந்தம்:— சுரங் காய்ந்து, காதுங் கண்ணும் அதிகமாய் வீங்கி வற்றும். கைகால் ஓயும். நாவு புண்ணுகும். துடிதுடித்து உடல் வெளுத்து நிறந் தளதளப்பாகும்.

(16) குடோரிமாந்தம்:— தேகமெல்லாம் பூரணித்து வீங்கி புண்போல் நோகும். கைகால் குளிரும். கொட்டாவி, ஏப்பமுண்டாகும். இரு நாசியிலும் நீர் வடியும். முகம் பிரகாசிக்கும். தலை கனத்துக் காணும்.

(17) சன்னிவீச்சுமாந்தம்:— உண்ட பதார்த்தம் ஜீரணிக்காமல் புளிப்பேறி நின்று வலியும், மயக்கமும், பற்கடிப்புமுண்டாகும். தண்ணீர் குடித்தவுடன் சர்த்திக்கும். சன்னி வந்து உயிரைப் பிரித்து விடும்.

(18) மகாதோஷமாந்தம்:—

சாற்றுகிறேன் பாலனுடல் வெதும்பும்வியர்க்கும்
சற்றுமுலையு முண்ணு து வாந்தியுண்டாம்
கூற்றுவனே மதிமயக்கஞ் சீதம்வீழும்
குணங்கெட்டு மலமதுவும் கெட்டபால்போல்
தேற்றுகிறேன் தெளிந்துதண்ணீர் போல்கழியும்
தேகம்வெப்பு நாற்றமுமாய் கைகால்குளிரும்
ஆற்றுகிறேன் நாவுலருங் குரலுங்கம்மும்
அப்பனே கண்குழிந்து சுழலுமாமே.

ஆமப்பா சிவந்துகண்ணுஞ் சுழன்றுகாணும்
அடைவான கைகாலும் பின்னலுண்டாந்

தாமப்பா முகமதுவும் பளிங்கதாகுந்
தங்கம்போல் மேனியது மின்னும்பாரு
போமப்பா மாந்தமது தோஷந்தோஷம்
பொருந்தியதோர் பாலகன்தன் பிணிதான்நோக்கி
நாமப்பா சொல்லிவிட்டோம் இந்தமாந்தம்
நன்றாகப் பார்த்தறிந்து நவிலலாமே.

## GENERAL TREATMENT.

### சிகிற்சை.

(1) நொச்சி, பொடுதலை, நுணா, வேலிப்பருத்தி இவைகளின் இலைகளை வகைக்கு ஒரு பிடி வீதம் நறுக்கி வெதுப்பிச் சாறு பிழிந்து ஒரு கரண்டியளவு எடுத்து அதில் இலேசாகப் பால்க்காயமுரைத்துக் கொடுக்கலாம். (நுணா = மஞ்சணாத்தி)

(2) சுக்குநாறிப்புல் வேர், தும்பை இலை, முருங்கை நெட்டு, நிலவிளாத்தி இலை வகைக்கு ஒரு கழஞ்சு வீதமும், வெள்ளுள்ளி, வெங்காயம், ஓமம், மஞ்சள், திற்பிலி வகைக்கு அரைக் கழஞ்சு வீதமும், தனித்தனியே வறுத்து ஒன்றாகச் சேர்த்துக் கஷாயஞ் செய்து தினம் இரண்டு நேரம் வீதம் குழந்தைக்குக் கொடுத்துவரவேண்டும்.

(3) தைவளை வேர், சுக்கு, வெங்காயம், வெள்ளுள்ளி, ஓமம், வசம்பு இவைகளை வகைக்கு அரைக் கழஞ்சு வீதம் ஒவ்வொன்றாய் வறுத்து கஷாயஞ் செய்து தினம் இரண்டு தடவை வீதங் கொடுக்கலாம்.

(4) "சுக்குமிளகு திற்பிலி
துய்யஓமம் உள்ளியுடன்
ஒக்கநொறுக்கிச் சீலையில்
உகந்துமுடிந்து நீர்உழக்காய்ச்
செக்கச்சிவக்கக் காச்சியபின்
சீராய்ச்சங்கு புகட்டிடவே
மிக்கமாந்த பிணிதோஷம்
விட்டேஓடும் கண்டாயே.
(இம்மருந்துகளையும் வறுத்துக்கொள்ளவேண்டும்.)

## OUR OWN PREPARATIONS.

மேற்படி ரோகங்களுக்கு எமது ஆசிரமத்தில் கிடைக்கக்கூடிய மருந்துகள்.

### (1) ஆதிமூலத்தைலம்.

இம்மருந்தில் அரை அவுன்ஸ் மூன்று நாள் ஆறு நேரமாக எல்லா மாந்தங்களுக்குங் கொடுக்கலாம்.

### (2) கெருடத்தைலம்.

மலச் சிக்கலோடும், காச்சலோடுஞ், சரீர வீக்கத்தோடுங் காணப்படும் மாந்த நோய்களுக்கு இம்மருந்தை முன் அளவுப்படி கொடுத்துவரலாம்.

### (3) கிஞ்சுகாதிநெய்.

சகல மாந்தங்களுக்கும். இதை முன்னளவுப்படி கொடுத்துவர சுகமுண்டாகும்.

பத்தியம்—தாய் புளிப்புப் பதார்த்தங்களை நீக்க வேண்டும். குழந்தைக்குத் தாயின் பாலும் கஞ்சித் தெளிவுந் தவிர வேறு ஆகாரங் கொடுக்கக்கூடாது.



## எச்சி ரோகம்.

இது குழந்தைகளுக்கு சரீர சீதோஷ்ணம் மாறு படுவதினாலும், நீர்த்தோஷத்தினாலும், தாய் தந்தை யரின் நோய்களினாலும் உண்டாகிறது. இதில் மேலெச்சி மூன்று வகையும், விலாவெச்சி மூன்று வகையுமுண்டு. மேலெச்சி மூன்றுக்கும் பெயர்கள்: (1) சுரயெச்சி; (2) சுழியனெச்சி; (3) குருவனெச்சி. விலாவெச்சி மூன்றுக்கும் பெயர்கள்: (1) வாதவிலா வெச்சி; (2) பித்தவிலாவெச்சி; (3) சிலேற்பன விலாவெச்சி.

## இவற்றின் குணங்கள்.

(1) சுரயேச்சி:— சிறு காச்சலுடன் கபமும் இருமலுமுண்டாகி சுவாசம் இழுத்து வாங்கும். தொண்டைக்குள்ளே பயறுபோல் முளைத்திருக்கும். அரைக் கண்ணாக உறங்கும்.

(2) சுழியனேச்சி:— தலை வியர்வையுடன் இருமலுண்டாகி இரு விலாவிலும் இழுத்து வாங்கும். பேதியும் கபமும் இறுகி, கண்விழி சில வேளைகளில் மேல் சொருகும். குழந்தை பால் குடியாது.

(3) குருவனேச்சி:— குழந்தை பால் குடியாமல் இருக்கும். குடித்தவுடனே வாந்தியாகும். இருமல் உண்டாயிருக்கும். உச்சியுங் குழிந்திருக்கும். சிறு ஒழுக்காகப் பேதி போகும். தொண்டையில் சிறிய குரு முளைத்திருக்கும்.

(4) வாதவிலாவேச்சி:— இருமலும் சுரமுந் தோன்றி பேதியும் நீரும் அடைத்து கைகால் சுழித்து மேல் மூச்சாக இரண்டு விலாவுமிழுத்துக் கண் மேல் சொருகும்.

(5) பித்தவிலாவேச்சி:— சுரமுண்டாகி பேதி இளகிப்போகும். சீதமுங் கபமுங் காணப்படும். அரைக்கண் அடைத்து நித்திரைசெய்யும். பால் குடியாது.

(6) சிலேற்பனவிலாவேச்சி:— சுரத்தோடு கபமுண்டாகி சரீரம் வியர்த்து அடிக்கடி இருமல் காட்டும். இரு விலாவும் இழுக்கும்.

## GENERAL TREATMENT.

### சிகிற்சை.

(1) இண்டிலை, தூதளையிலை, கண்டங்கத்தரி இலை, வகைக்குப் பிடி—1. திற்பிலி, வெள்ளுள்ளி, வகைக்கு கழஞ்சு—1. இவற்றைக் கஷாயஞ்செய்து தினம் இரண்டு தடவை வீதம் குழந்தைக்குக் கொடுத்து வரலாம்.

(2) ஆடாதோடையிலை, நொச்சியிலை, இஞ்சி, முருங்கைப்பூ, வெள்ளுள்ளி இவைகளை வகைக்கு ஒரு கழஞ்சு வீதம் சதைத்து முலைப்பால் தெளித்து புட்டவியல் செய்து பிழிந்து அதில் ஓர் அரிசியெடை திரிகடுகுத்தூள் சேர்த்துத் தினம் இரண்டு தடவை வீதம் கொடுத்துவரலாம். (திரிகடுகு என்பது சுக்கு, மிளகு, திற்பிலி).

## OUR SPECIALITIES.

### மேற்படி ரோகங்களுக்கு எமது ஆசிரமத்தில் கிடைக்கக்கூடிய மருந்துகள்.

### (1) வச்சிரத் தைலம்.

இதில் அரை அவுண்ஸ் மூன்று நாள் ஆறு நேரமர்கக் குழந்தைக்குக் கொடுக்கலாம்.

### (2) விரோசன மாத்திரை.

பேதிக்கட்டாவது வயிற்றுப் பொருமலாவது இருக்குமானல் தினம் ஒரு தடவை ஒரு விரோசன மாத்திரையும் முலைப்பாலிலாவது இஞ்சிச் சாற்றிலாவது உரைத்துக் கொடுக்கவேண்டும். (சிறு குழந்தைகளுக்கு அரை மாத்திரை)

### (3) குங்கும மாத்திரை.

ஒரு வயதிற்கு மேற்பட்ட குழந்தைகளுக்கு இம் மாத்திரையில் ஒன்று குப்பைமேனிச் சாற்றிலாவது

இஞ்சிச் சாற்றிலாவது உரைத்துக்கொடுக்க வாந்தியுண்டாகி, கபம் வெளிப்பட்டு இலகுவுண்டாகும்.

பத்தியம்—குழந்தைக்குத் தாயின் பாலும் கஞ்சித் தெளிவும் கொடுக்கலாம். தாய்க்கு இச்சா பத்தியம்.



## சுழியன் ரோகம்.

எச்சிக்குச் சொல்லியிருக்கும் காரணங்களே இந்நோய்க்கும் அமைந்துள்ளது. இதில் எட்டு வகையுண்டு. அவையாவன: (1) சுவாசகண்டி; (2) மறையோன்; (3) மந்தாரச்சுழியன்; (4) முசல்சுழியன்; (5) சிங்நன்சுழியன்; (6) பரிச்சுழியன்; (7) அனந்தன் சுழியன்; (8) கூகையன்சுழியன்.

### இவற்றின் குணங்கள்.

(1) சுவாசகண்டி:— சரீரத்தில் சுரங் காய்ந்து பேதி ஜலம் பிடித்து மேல்மூச்சாக இரு விலாவும் குழித்து இழுக்கும். தொண்டைக்குள் குருப்போல் முளைத்திருக்கும்.

(2) மறையோன்:— தலைநீருண்டாகி நாசியில் நீர் வடிந்து, உச்சி குழிந்திருக்கும். வேப்பின் பூபோல் பேதி ஒழுகிக்கொண்டிருக்கும். குழந்தை வாய் சவைக்கும். சிறுநீர் சூடாயிருக்கும். அடிக்கடி இருமலுண்டாகும். விலா இழுக்கும்.

(3) மந்தாரசுழியன்:— காச்சல், மயக்கம் இவைகளுண்டாகி கால்கரங்கள் குளிர்ந்திருக்கும். வயிற்றில் மந்தமுண்டாகி இருமல், கக்கல், மேல்மூச்சு இவைகளோடு ஈரல், நெஞ்சு இவைகள் புண்போல் நோவுண்டாகி வரவர பெலன் குறைந்து கண் மேல்ச் சொருகும். இந்நோய் பன்னிரண்டுக்குள் கொன்று விடும்.

(4) முசல்சுழியன்:— இருமலும் சர்த்தலு முண்டாகி முகமும் தலையும் கனத்துக் காணப்படும். குரல் கட்டிக்கொள்ளும். பேதி போகாது. இரு விலாவும் இழுக்கும். கால்கரங்கள் வலிக்கும்.

(5) சிங்ஙன்சுழியன்:- காச்சலுஞ் ஜலதோஷமு முண்டாகி கபம் அதிகரித்து சுவாசம் இழுக்கும்.. உதடுகளிலும் நாவிலும் புண் உண்டாயிருக்கும் குழந்தை பால் குடியாது.

(6) பரிச்சுழியன்:— கால் கரம் குளிர்ந்திருக் கும். சரீரம் வீங்கிக்கொள்ளும். வாயில் பதை வரும். வாய் சவைக்கும். பெருமூச்சும் வலியுமுண்டாகும்.

(7) அனந்தன்சுழியன்:— சுரம் தோன்றி குழந்தை பயந்து அழும். தாகமெடுக்கும். வயிறு மந்தமாகும். தலைநடுக்கமுண்டாகி விலாவிழுத்துச் சுழித்துவாங்கும். நெஞ்சு நோகும். பொறி தளர்ந்து உடல் குளிர்ந்து மயக்கமாகும். இந்நோய் தோன்றி பதினறு நாள் கழிக்குமாகுல் குழந்தை பிழைத்துக் கொள்ளும்.

(8) கூகையன்சுழியன்:— காச்சலுண்டாகி இருமலோடு சுவாசம் இழுக்கும். பேதியும் சிறுநீரும் போகாது. கபம் முட்டி பரிதவிக்கும். பால் சர்த்திக்கும். தலையில் காச்சல் அதிகமாயிருக்கும்.

இந்நோயில் சுவாசகண்டி, மந்தாரம், பரி, அனந்தன் இந்நான்கும் அசாத்திய நோய்களாம்.

## GENERAL TREATMENT.

### சிகிற்சை.

(1) ஆடாதோடையிலை, நொச்சியிலை, இஞ்சி, முருங்கைப்பூ, வெள்ளுள்ளி, இவைகளை முலைப்பால் தெளித்து புட்டவியல் செய்து பிழிந்து அதில் வச்சிரத்தைலம் சேர்த்துக் கொடுக்கவேண்டும்.

(2) ஆடாதோடை வேர், தூதளை வேர், செஞ்சட்டி வேர், கருஞ்சுண்டை வேர், இசங்கு வேர், குப்பைமேனியிலை, நொச்சியிலை, வகைக்கு கழஞ்சு—1. திற்பிலி மூலம், அக்கிரு, அரிச்சனிஞாயிறு, அதிமதுரம், வால்மிளகு, தேவதாரம் வகைக்கு கழஞ்சு—$\frac{1}{4}$ வீதம் கஷாயமிட்டு தினம் இரண்டு தடவை வீதம் குழந்தைக்குக்கொடுத்துவரலாம்.

(3) இண்டிலை, இசங்கு வேர், தூதளை வேர், கோரங்கிழங்கு, சீரகம், மல்லி, அரிச்சனிஞாயிறு, சுக்கு சித்தரத்தை வகைக்கு கழஞ்சு-$\frac{1}{2}$ வீதம் கஷாயஞ் செய்து தினம் இரண்டு தடவை வீதங் கொடுத்து வரலாம்.

# OUR SPECIALITIES.

ஷை நோய்களுக்கு எமது சிசு வைத்திய ஆசிரமத்தில் கிடைக்கக்கூடிய மருந்துகள்.

(1) வச்சிரத்தைலம்:- முன் எச்சிக்குச்சொல்லி யிருக்கும் அளவின்படி இந்நோய்களுக்கும் கொடுத்து வரலாம்.

(2) குடோரசஞ்சீவித்தைலம்:— இதில் அரை அவுன்ஸ் ஆறு நேரமாக குழந்தைக்குக் கொடுக்கலாம், நோய் கடினமாயிருக்குமானல் இத்தைலத்தை முன் சொல்லியிருக்கும் புட்டவியல் பாகத்தோடு சேர்த்துக் கொடுக்கலாம்.

(3) விரோசனமாத்திரை:— வயிற்றுப் பொரு மலிருந்தால் அவசியப்படும்போதெல்லாம் தினம் ஒரு தடவை ஒரு மாத்திரை இஞ்சிச் சாற்றில் உரைத்துக் கொடுக்கவேண்டும். (சிறு குழந்தைகளுக்கு அரை மாத்திரை)

நெஞ்சிலும், விலாவிலும் தவிட்டுக் கிழியினல் சூடு ஒற்றல் செய்யவேண்டும். சரீரத்தில் காற்றுக் கொள்ளாமல் மூடிவைக்கவேண்டும். தண்ணீர் கொடுக்கும்போது நெஞ்சு நனையாமல் கவனித்துக்கொள்ள வேண்டும்.

பத்தியம்—குழந்தைக்குத் தாயின் பாலும், கஞ்சி நீரும் கொடுக்கலாம். தாய்க்கு இச்சா பத்தியம்.




இந்நோயில் ஆறு பிரிவுகளுண்டு. இவற்றில் இரண்டு வகை மாத்திரம் ஔஷதஞ் செய்தால் மீளு மென்றும் மற்ற நான்கு வகைகளும் அசாத்திய ரோகங்களென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அவை களாவன: (1) வாதச்சுழியன்; (2) பித்தச்சுழியன்; (3) சிலேற்பனச்சுழியன்; (4) தொந்தச்சுழியன்; (5) சுவாசகாசச்சுழியன் (6) சுரகாயச்சுழியன்.

## இவற்றின் குணங்கள்.

(1) வாதச்சுழியன்:— அதிகமாய் சுரங் காய்ந்து தொண்டை நொந்து இருமலுண்டாகி, நாவு மரம் போல் வறட்சையாகி சுவாசம் இழுக்கும்.

(2) பித்தச்சுழியன்:— சுரமுண்டாகி கண் மயங்கும். சரீரம் விம்மும். வாந்திக்கும். இருமலும் இளைப்புமுண்டாகி விலா சுழிக்கும். குரலெரியும். பாலுண்ணாது.

(3) சிலேற்பனச்சுழியன்:— வாந்தியும் இருமலு முண்டாகி வாய்நீர் வடியும். தலை நோவும் வியர் வையும், சுரமுங் காணும். விலாவும் நெஞ்சும் இழுத்து வாங்கி, மலம் கட்டி, வயிறு பொருமும்.

(4) தோந்தச்சுழியன்:— இரு விலாவிலும் மூச்சு இழுத்து நெஞ்சு குழிந்து மலமும் நீருங் கருகி கண்விழி பரந்து பார்க்கும். பால் உண்ணுது. திட்டு முட்டாக முக்கும். சரீரம் மெலிந்துவரும். இடுப் புக்குமேல் சுரங்காணும். நாவறட்சையும் நடுக் கமும் உண்டாகி விறைக்கும். இந்நோய் பன்னிரண் டாம் நாள் மோசஞ் செய்யும்.

(5) சுவாசகாசச்சுழியன்:— சுவாச இழுப்போ டாரம்பித்து பல்கடிப்பு மிகுதியாயிருக்கும். வயிறு விம்மிக்கொள்ளும். கபம் எதிரிட்டு இளகும். படுக்க முடியாமல் சரித்து இருத்திவைக்கும். இந்நோய் அசாத்தியம்.

(6) சுரகாயச்சுழியன்:— தலை கனத்து நொந்து நாசியில் நீர் வடிந்து சிறு சுரம் தோன்றி வரவர அதிகரித்து தூரத்தில் நிற்பவர் கேட்கும்படியான சத்தமாக இரைப்புண்டாகி ஈரல் நோவுடன் சுழித்து இழுத்துவாங்கும். பெரிய கஷ்டங்களை உண்டுபண்ணி கடைசியில் கொன்றுவிடும்.

## TREATMENT.

## சிகிற்சை.

இந்நோய்களுக்குத் தைலங்களும், மாத்திரைகளும் சேர்க்காமல் கஷாயங்களினுல் மட்டும் அதிகப் பிர யோஜனமுண்டாகாது. ஆகையால் குடோரித்தைலம், குடோரசஞ்சீவித்தைலம், ஆனந்த சஞ்சீவித் தைலம், கோமேதகக் குளிகை, விரோசனமாத்திரை முதலிய

மருந்துகளைத் தனியாகவாவது கீழ் சொல்லியிருக்கும் அனுபானங்களுடன் சேர்த்தாவது கொடுத்துவர வேண்டும். மேற்படி தைலங்கள் அரை அவுண்ஸ் ஆறு நேரமாகக் கொடுக்கலாம்.

(1) சுக்கு, மிளகு, இந்துப்பு, தூதளை வேர், அமுதுவள்ளி இவைகளைக் கஷாயஞ்செய்து அதில் குடோரசஞ்சீவித்தைலஞ் சேர்த்துக் கொடுத்துவரலாம்.

(2) தூதளையிலை, இசங்கிலை, இண்டிலை, ஆடாதோடையிலை, வில்வயிலை, நிலவேர், வெள்ளுள்ளி, அமுதுவள்ளி, கண்டங்கத்தரி, அப்பட்டுக்குருந்து, பெருந்தும்பையிலை, நொச்சியிலை, கொழிஞ்சிவேர், செஞ்சட்டிவேர், வேலிப்பருத்தியிலை, சாட்டுக்கொன்றைக்குருந்து, இஞ்சி, கோரங்கிழங்கு, மயிலிறகு சுட்ட கரி, முசுறு முட்டை, குழிமீண்டான் பச்சிலை, வடக் கயிறு சுட்ட கரி வகைக்கு கழஞ்சு அரை. திரிகடுகு, நறுக்குமூலம், சித்தரத்தை, கற்கடகசிங்கி, கடுக்காய்த் தோடு, வெந்தையம் வகைக்குக் கழஞ்சு கால், இவைகளைச் சதைத்து முலைப்பால் தெளித்து புட்டவியல் செய்து பிழிந்து ஒரு பெரிய கரண்டியளவு எடுத்து அதில் கோமேதகக்குளிகையும் ஆனந்தசஞ்சீவித்தைலமும் சேர்த்துக் கொடுத்துவரலாம்.

(3) விரோசன மாத்திரையும் இடைக்கிடையே வயிற்றுப் பொருமலிருக்கும்போது முன் அனுபானங்களில் கொடுத்துவரவேண்டும். சீதம், சன்னி முதலியவற்றின் குறிகள் கண்டவுடன் குழந்தையின் உச்சந்தலையிலும், கைகால்களிலும், நெஞ்சிலும் குடோரித் தைலத்தை வெளிப்பிரயோகமாக அப்பியங்கம் செய்ய

வேண்டும். நெஞ்சு, விலா, முதுகு முதலியவிடங்களில் தவிட்டுக்கிழியினால் அடிக்கடி சூடு பிடிக்க வேண்டும்.

பத்தியம்:— குழந்தைக்குத் தாயின் பாலும் கஞ்சித்தெளிவும் கொடுத்து வரலாம். தாய்க்கு இச்சா பத்தியம்.



## கரப்பன் ரோகம்.

இந்நோய் தாய் தந்தையரின் மேக ரோகங்களினாலும் குழந்தையின் மலக்கட்டினாலும் சிகப்பு ரோகத்தாலும் கிருமியினாலும் உண்டாகிறது. இதில் பதினெட்டுப் பிரிவுகளுண்டு. அவற்றின் பெயர்கள் பின் வருமாறு:-(1) மாரிக்கரப்பன், (2) கொள்ளிக்கரப்பன், (3) அத்திக்கரப்பன், (4) செங்கரப்பன், (5) சூலைக் கரப்பன் (6) வேர்க்கரப்பன், (7) சுரகரணன்கரப்பன், (8) விஷகரப்பன், (9) சுரகரப்பன், (10) நீர்க் கரப்பன், (11) உள்ளுரோகக்கரப்பன், (12) கழுதணைக்கரப்பன், (13) வெடிகரப்பன், (14) செங்கிரந்திக்கரப்பன், (15) கடிவிஷக்கரப்பன், (16) சுராவாதகரப்பன், (17) விஷவெடிகரப்பன், (18) மண்டைச் சூலைக்கரப்பன் முதலியனவாம். இவற்றில் ஏழு வகை அசாத்திய ரோகங்களாம்.

## இவற்றின் குணங்கள்.

(1) மாரிக்கரப்பன்:— குழந்தையின் சரீரத்தில் காசுபோல் வட்டம்வட்டமாகச் சிவந்து வரவரக் கடுஞ் சிவப்பாகத்தோன்றும். குழந்தை குரல் கட்டி பறவையின் சத்தம்போல் அழும். மலஜலம் பிடித்து கபம் ஏறி சுவாசம் முட்டும். இந்நோய் மகா கொடிது.

(2) கோள்ளிக்கரப்பன்:— காச்சலோடு சரீரத்தில் பொள்ளளுண்டாகி புடைத்து மோதிப் பழுக்கும். பேதி பிடித்துக்கொள்ளும்.

(3) அத்திக்கரப்பன்:— தேகமெங்கும் அத்திக் காய்போல் நிறைந்து பழுக்கும். ஊரலுண்டாகி சொறிந்து புண்ணாகும்.

(4) செங்கரப்பன்:— சிரசு வலித்து தேகஞ் சிவந்து நொந்து தலையிலும் சரீரத்திலும் புண்ணாகி வெடிக்கும். குரல் கட்டும்.

(5) சூலைக்கரப்பன்:—சரீரத்தில் நீர்க்கட்டுபோல் கனத்துத் திரண்டு காச்சலுண்டாகி பல வேதனைகளை உண்டுபண்ணும். சிலவிடங்களில் சிவந்து புண்ணாகி சிலவிடங்களில் பழுத்து வெடிக்கும்.

(6) வேர்க்கரப்பன்:—சுரமுண்டாகி சரீரத்தில் வீக்கந்தோன்றி வெடித்துப் புண்ணாகும். கபமுண்டாகி குரல் சத்தங் குறைந்துபோகும். வயிற்றுக்கழிச்சலும் அதிகமாயிருக்கும். இது மூன்று மாசங்கள் வரையிலுமிருக்கும்.

(7) சுரகரணன்கரப்பன்:— சுரம் தோன்றி, காதில் குத்துளைச்சலும் தலையில் கொடிய வேதனையும் உண்டாகும். கழுத்துக்குமேல் வீக்கமாகி காதுக்குள் பழுத்துடையும். பத்தாம் நாள் சன்னியுண்டாகி நாசி வழியாக இரத்தம் பாய்ந்து மரணமுண்டாகும்.

(8) விஷகரப்பன்:— தேகத்தில் சிவந்து சிரங்கு போல் காணப்பட்டு நீர் கோர்த்து ஊரலுடன் தலைக் காச்சலும் வயிற்றுக்குள் வேதனையுமுண்டாகி கால்கள் இரண்டும் புண்ணாகி வெடித்து நீர் வடியும்.

(9) சுரகரப்பன்:— சுரத்துடன் இருமலோடு தேகமெல்லாம் தணத்து ஊரும். சுரம் விட்டு சரீரங் குளிர்ந்துவிடும். வாய் புண்ணாகும். நுரையும் சோரையும் சர்த்திக்கும். இந்நோய் பதினெட்டுக் கழிப்பது அரிது.

(10) நீர்க்கரப்பன்:— காச்சலுண்டாகி தேகத்தில் வறண்ட சிரங்குபோல் வந்து வளர்ந்து குருப் போல் பழுப்பாகும். கண் வீங்கும். வாயிலும் புண்ணாகும்.

(11) உள்ளுரோகக் கரப்பன்:— தேகத்தில் அசைவுகளிலும் சந்துகளிலும் பருப்போல் வந்து புண்ணாகி புண் குழிந்து காணப்படும். காச்சலுங் குளிருமுண்டாகி பேதி பிடிக்கும். சரீரம் வீங்கிக் கொள்ளும். பத்து மாசம் வரையிலும் இந்நோய் வருத்தஞ்செய்யும்.

(12) தழுதணைக் கரப்பன்:—தேகத்தில் பற்றுப் போல் தோன்றி படர்ந்து ஊரலுண்டாகும். கூட்டங் கூட்டமாக முளைத்து அடர்ந்து நீர் சுவரும்.

(13) வேடிகரப்பன்:— சரீரத்தில் வெள்ளரிப் பழம்போல் வீங்கிப் புண்ணாகி வெடித்து நீர் வடியும். காச்சல் மிகுதியாயிருக்கும். விஷப்போல் தடித்தூதும். கபமுமுண்டாகும். இது மிகக்கொடிய நோய்.

(14) செங்கிரந்திக்கரப்பன்:—மூன்று நாள் காச்சல் தோன்றி பிறகு சரீரத்தின் பலபல இடங்களிலும் சினத்துச் சிவந்து சிறுபயற்றின் அளவாகக் காணப்பட்டு கனத்துப் பழுத்து புண்ணாகி இளநீர்போல் வடியும். பேதி பிடிக்கும்.

(15) கடிவிஷக்கரப்பன்:— கால் படத்தின்மேல் முட்டின்கீழே தினவுண்டாகி சேனைக்கிழங்கின் குருப்புப்போல் புடைத்து வெடித்துப் புண்ணாகி நீர்வடியும்.

(16) சுரவாதகரப்பன்:— சுரத்துடன் உடம்பு நொந்து பலபல இடங்களில் துண்டு துண்டாய் தடித்து வீங்கி நடு உயர்ந்திருக்கும். குழந்தை கண் தூங்கும்.

(17) விஷவேடிகரப்பன்:— சுரம் தோன்றி உடம்பு வீங்கி எட்டுநாள் சென்றபிறகு சரீரத்தில் பொள்ளிப் புண்ணாகி நெருப்பில் வெந்ததுபோலாகும். பதினெட்டாம் நாள் மலம் பிடித்து வயிறு ஊதிக் கொல்லும்.

(18) மண்டைசூலைக் கரப்பன்:—

"தலையினில் பனியுண்டாகி
 தயவுடன் முடிபுகுந்து
சிரசினில் குருப்போல் வந்து
 சிவந்திடுஞ் சுரமுங்காயும்
பலமுடன் வயிறும் ஊதும்
 பாறைபோல் ஊதிக்கொள்ளும்
கொலை செய்யும் குருவுடைந்து
 குறுகுறுய்ப் பாயும் இரத்தம்".

"இரத்தமும் பாய்ந்தபோது
 இரசநிற மஞ்சள் நீர்போல்
ஒத்ததோர் வாயில் மூக்கில்
 ஓய்ந்தநல் காதினோடு
மெத்தவே பாயும்போது
 மேலெழுஞ் சன்னிதானும்
சித்தமாய் இருபதுக்குள்
 சீவனும் பறக்குமென்றே".

## GENERAL TREATMENT.

### சிகிற்சை.

(1) கருஞ்சீரகம், நல்லமிளகு, கெருடக்கொடிவேர், கருஞ்சூரைப்பட்டை, பூவரசம்பட்டை, வகைக்குக் கழஞ்சு அரை வீதம் கஷாயமிட்டு அரிசியெடை கோரோசனையுரைத்து தினம் இரண்டு தடவை குழந்தைக்குக் கொடுத்துவரலாம்.

(2) திற்பிலி, கொத்தமல்லி, நல்சீரகம், ஈருள்ளி, வெந்தயம், கிரும்பு, கருஞ்சீரகம் வகைக்குக் கழஞ்சு அரை. துளசிஇலை, செம்பொன்நெரிஞ்சிவேர், கருங்காணம், நொச்சிக்கொழுந்து, வேப்பின்நெட்டு, வகைக்குக் கழஞ்சொன்று இவைகளைக் கஷாயமிட்டு ஒருகரண்டியளவு தினம் இரண்டு தடவை வீதம் கொடுக்கலாம்.

(3) "சிவகின்பு மேனியோ டதிமதுர முள்ளியும்
சீரகம் ரண்டு லுவாய்
திற்பிலி கிராம்புகார் கோலரிசி கொட்டமும்
செந்துளசி கருங்காணமாம்
கவனமுறு நொச்சியுட தளிர்பொன் னெரிஞ்சியும்
கடுநின்ப நெட்டுடனே
கனமான வெற்றிலையின் நெட்டுடனே மல்லியும்
கழஞ்சிநிறை யாகவேதான்
தவனமுறு பாணியிரு நாழிதனில் விட்டனலை
தனையெரித் தெட்டிலொன்றாய்
தப்பா தறுபொழுது பாலகர்க் கருந்திட
தவறுநோ யானதுகேள்
பவனமுறு சொறிகள்புரை தணப்புநீர் கெட்டுகள்
படுவனோடு படுகிரந்தி
பண்பான கரப்பனோ டன்பத்து நாலறும்
பரீட்சையிது கைகண்டதே."

## OUR SPECIALITIES.

மேற்படி ரோகங்களுக்கு எமது ஆசிரமத்தில்
கிடைக்கக்கூடிய மருந்துகள்.

(1) கனகசூரிதயிலம்:— ஒரு வயதிற்குக் கீழுள்ள குழந்தைகளுக்கு ஒருஅவுன்ஸ் தயிலம்எழுநாள்

பதினான்கு நோமாகவும் ஒரு வயதிற்கு மேலுள்ள குழந்தைகளுக்கு ஆறுநாள் பன்னிரண்டு நோமாகவும் கொடுக்கவேண்டும்.

(2) கத்தபாமிர்த எண்ணெய்:— இதை வெளிப் பிரயோகமாக புண்களில் தொட்டுப்போடலாம். தலை யில் போடக்கூடாது.

(3) பாலரஞ்சித எண்ணெய்:—உள்ளுக்கு மருந்து கொடுத்து முடிந்தால் இந்த எண்ணெயைத் தலையிலும் தேகத்திலும் தேய்த்து குளிப்பாட்டிவரலாம்.



## கிரந்தி ரோகம்.

இந்நோய் கரப்பன்போலக் காணப்படும். ஆனால் மெத்த வருத்தஞ்செய்யும். சுகம்வர அதிக நாள்ச்செல் லும். இது எழு பிரிவுகளுடையது. அவற்றின் பெயர் கள் (1) செங்கிரந்தி (2) கருங்கிரந்தி (3) மேகக்கிரந்தி, (4) அரிகிரந்தி, (5) பால்க்கிரந்தி, (6) புழுக்கிரந்தி, (7) வாய்க்கிரந்தி. இவைகளில் ஐந்து வகை சாத்திய நோய்களும் இரண்டுவகை அசாத்திய நோய்களுமாம்.

### இவற்றின் குணங்கள்.

(1) செங்கிரந்தி:— பயறுபோல் அவயவங்களி லெங்கும் காணப்பட்டு நிறம் சிவந்து ஜலம் கோர்த்து

நிற்கும். பால் குடித்தவுடன் வாந்தியெடுக்கும். சுரம் காயும்.

(2) கருங்கிரந்தி:—குழந்தையின் வயிறுபொருமி காச்சலும் கபமும் உண்டாகி சரீரமெங்கும் பருத்தி விதைபோல் காணப்பட்டு கறுப்புத்தோன்றும். இந் நோய் சரீரத்தினுள்ளே தாவிக்கொள்ளும். மனம் மறுக்கி சர்த்தலுண்டாகும். பால் குடியாது. வாய்நீர் ஓடும். புண்களில் சீழ் சலம் உண்டாகி நாறும். சளியாகவும் இரத்தமாகவும் பேதிபோகும். இது அசாத்திய நோய்.

(3) மேகக்கிரந்தி:—உரத்த சுரம் காய்ந்து குழந்தை பாலுண்ணாது. சிறுநீர் கட்டித் தரிப்புண்டாகும். சரீரமெங்கும் சுண்டைக்காய்போல் புடைத்துப் பழுத்து நீர் ஒலித்து நாற்றமுண்டாகும். தேகம் வீங்கி சக்தி குறைந்து குரல் கட்டி இருமலும் தாகமும் உள்ளெரிந்து காந்தலும், சர்த்தலும், விக்கலுமுண்டாகி வாய் நீர் வடியும். கண் மயங்கி மேல்மூச்சோடு விழி சொருகி உணர்வு குன்றி உயிர் போகும்.

(4) அரிகிரந்தி:—சரீரமெங்கும் அரித்து ஊரல் உண்டாகும். சிரங்குபோல் வெளியில் காணப்படாது. நித்திரையில்லாமல் குழந்தை அழுதுகொண்டிருக்கும்.

(5) பால்க்கிரந்தி:— குழந்தையின் தேகத்தில் பாசிப்பயறுபோல் சிரங்கு தோன்றி பரந்து பழுத்து பாலின் நிறமாக நீர் வடியும்.

(6) புழுக்கிரந்தி:— சரீரத்தில் பொள்ளி புண்ணாகி நீர் சுரந்திருக்கும். குழந்தை பாலுண்ணாது. சீறி அழும்.

(7) வாய்க்கிரந்தி:—குழந்தையின் வாய், நாக்கு, தொண்டை, உதடு முதலியவிடங்களில் சுணைத்துப் புண்ணுண்டாகி அழுகி நாறும். குழந்தை பால் குடியாது. வாய்நீர் வடிந்துகொண்டிருக்கும்.

## GENERAL TREATMENT.

### சிகிற்சை.

(1) மாதளம்பிஞ்சு, கருஞ்சூரைவேரின்பட்டை, செம்பொன்நெரிஞ்சி, மூடக்கொத்தான், மூக்கறைச் சாரணைவேர், நல்சீரகம், பெருஞ்சீரகம், கருஞ்சீரகம், கார்கோலரிசி, சந்தனம், அதிமதுரம் மாயக்காய், வெள்ளறுகு, திற்பிலி வகைக்குக் கழஞ்சு அரைவீதம் கஷாயமிட்டு கோரோசனை உரைத்து தினம் இரண்டு தடவை வீதம் கொடுத்துவரலாம்.

(2) "ஏகுமே அரிசியாறு இருசீரம் சீனப்பாவும்
போகுமே அரத்தைகார்கோல் புதியமா யக்காய்ஏலம்
வேகுமே சாதிமூன்று வெள்ளுள்ளி துளசிநீலி
ஆகுமே கருவிலாஞ்சி அருந்நலை சூடிதானே"

"சூடிய சித்திரமூலம் துத்திவெள் ளறுகுநாணல்
ஆடிய செங்கத்தாரி ஆனைப்புல் சித்தாமுட்டி
நாடிய தெற்றிமூலம் நல்லசெம் பருத்திசெவ்வேர்
கூடிய வகைகழஞ்சு குறுணிதா னீரிலன்றே"

"என்றதோ ரடைகஷாயம் எட்டிலொன் றுனபோது
அன்றுதொட் டந்நிசந்தி ஆறுநா ளருந்தச்சொல்லு
துன்றிய கிரந்திமேகம் தொடர்விஷ கரப்ப னூர்தல்
சென்றதோ ருடலைவிட்டுத் தீர்ந்திடும் திட்டந்தானே"

"திட்டமாம் கிரந்திஎழும் சிகிற்சையு மறியசொன்னேம்
மட்டில்லா கர்மதோஷம் மருந்தினல் தீருமோதான்
சட்டமாந் தானதர்மந் தவஞ்செய்யில் பிணிதானீங்கும்
கட்டளை யாயுரைத்த கருத்தைநீ வணங்குவாயே"

## OUR SPECIALITIES.

மேற்படி ரோகங்களுக்கு எமது ஆசிரமத்தில்
கிடைக்கக்கூடிய மருந்துகள்.

(1) கோலாதி நெய்:— இம்மருந்தில் அரை அவுண்ஸ் மூன்று நாள் ஆறு தடவை வீதம் குழந்தைக்குக் கொடுத்துவரலாம்.

பத்தியம்:—உப்பு, புளி, ஜலபானம் உதவாது.

(2) வீராணித்தைலம்:— இதைக் கழுத்தின் கீழுள்ள விரணங்களில் வெளிப்பிரயோகமாக உபயோகப்படுத்தவேண்டும்.

(3) பால ரஞ்சித எண்ணெய்:— இதைத் தாயும் குழந்தையும் தேய்த்து வென்னீரில் குளித்துவரலாம். இதற்குப் பத்தியமில்லை.






## பால் வகைகளின் குணம்.

**பசுவின் பால்:—** பாலருக்கும், விருத்தருக்கும் பல பொதுவான ரோகங்களையுடையோருக்கும் ஏற்றதாகும்.

**எருமைப் பால்:—** திமிர் வாயுவையுண்டாக்கி தெளிந்த புத்தியின் கூர்மையையும் நல்ல மருந்தின் குணத்தையும் கெடுக்கும்.

**வெள்ளாட்டுப் பால்:—**வாத பித்த தொந்தம், சுவாச காசம், கிராணிரோகம், வாதவீக்கம் முதலியவற்றை நீக்கும். நல்ல பசியையு முண்டாக்கும்.

**செம்மறியாட்டின் பால்:—**பித்த சிலேற்பன தொந்தம், வயற்றுப்பிசம், மேல் சுவாசம் இவைகளையுண்டாக்தும். பத்தியத்துக்குதவாது. வாயுவை யதிகரிக்கச்செய்யும்.

**கழுதைப் பால்:—**மிகுந்த மதுரத்தையுடையது. வாத நோய், கரப்பன், புண், கிரந்தி, பிரமேகம், சொறிசிரங்கு, பித்ததோஷம், பயித்திய ரோகம், கபநோய் இவைகளை நீக்கும்.

**தேங்காய்ப் பால்:—**வாதம், பித்தம், கரப்பன் இவைகளையுண்டாக்கும். மதுரமாயிருக்கும்.

ஆலம்பால்:—பிரமேகத்தை நீக்கும். அசையும் பற்களை இறுக்கும். சிரசுக்குக் குளிர்ச்சியைத் தரும்.

**புங்கம்பால்:**—புங்கமரத்தின் பட்டையை மெல்லிய தாய்ச் சீவிப்புழிந்த பாலானது புண்களை ஆற்றும். சர்மத்துக்கு அழுத்த முண்டாக்கும்.

## தயிர் மோர் வகைகளின் குணம்.

**பசுவின்தயிர்:**— நல்ல பசியை யுண்டாக்கும். சீரண ரோகம், தாகம், ஆயாசம், காசம், சரீர எரிச்சல் இவற்றை நீக்கும்.

**எருமைத்தயிர்:**— இதினால் சரீர எரிச்சலும், பித்த நோயும் நீங்கும். கரப்பன், வாதம், புத்திமந்தம், கண்ணுக்குக் குளிர்ச்சி ஆகிய இவைகளை யுண்டாக்கும்.

**பசுமோர்:**—வீக்கம், மகோதரம், வயிற்றுவலி, பாண்டு ரோகம், பித்தகோபம், இடுமருந்தால் வரும் நோய்கள், பேதி, திரிதோஷம், அக்கினி மந்தம், வெப்பம் இவைகளைப் போக்கும்.

**எருமை மோர்:**—தாகம், கிராணிரோகம், சலக்கழிச்சல் காமாலை, கிருமி ஆகிய இவைகளை நீக்கும். சிறந்த அமுத மாகும்.

## நெய் வகைகளின் குணம்.

**பசுவின்நெய்**—கண்களுக்கு ஒளியும், சரீர புஷ்டியும் உண்டாக்கும்.

**எருமை நெய்:** – அழகு, அறிவு, கண்ணொளி இவைகள் மத்திபமாம்.

**பன்றி நெய்:** —மூத்திரக்கடுப்பையும், இரத்த மூலக்கிராணியையும், வாதக்கடுப்பு முதலிய பிணிகளையும் நீக்கும்.

**காக்கை நேய்:**—சோகை, காமாலை முதலியவைகளை விலக்கும்.

**ஆமணக்கு நேய்:**—வெப்பத்தைத் தணிக்கும். வயறு இளக்கும். உடலை வளர்ப்பிக்கும்.

**எள்ளின் நேய்:**—புத்திக்குத் தெளிவு, விழிக்குக் குளிர்ச்சி, மனமகிழ்ச்சி, தேகபுஷ்டி, பலம், அழகு, வாலிபத் தன்மை இவைகளை யுண்டாக்கும்.

**வேப்ப நேய்:**— வாதம், கிரந்தி, கரப்பன், சிரங்கு, சுரம் இவற்றை நீக்கும். பித்தமுண்டாக்கும்.

**தேங்காய் நேய்:**—தீச்சுட்டபுண், தந்தமூல ரோகம், படர்தாமரைச்சிரங்கு, முதலியவற்றைப் போக்கும். தலை மயிர் வளரச்செய்யும்.

## கடைச்சரக்கு வகைகளின் குணம்.

**சுக்கு:**—"வாதப் பிணிவயி றூதற் செவிவாய்
வலிதலை வலிகுலை வலியிரு விழிநீர்
சீதத் தொடுவரு பேதிப் பலரோ
சிகமலி முகமக முகவிடி கபமார்
சீதச் சுரம்விரி பேதச் சுரநோய்
தெறிபடு மெனமொழி குவர்புவி தனிலே
யீதுக் குதவு மீதுக்குதவா தெனும் விதி
யிலைநவ சுறுகுண முளவே சுக்கு"

**மிளகு:**— குளிர்சுரம், இருமல், வாதம், வாயு, அஜீரணம், அரோசிகம் இவைகளை நீக்கும்.

**திற்பிலி:**—காசம், கபகுன்மம், சுவாசரோகம், க்ஷயம், பாண்டு, நெஞ்சுநோய், கிருமி, அதிசாரம் இவற்றைப் போக்கும்.

**கடுக்காய்:**—மலச்சிக்கல், வாயு, பித்தம், வாதம், முதலிய பல நோய்களை அகற்றி உடலை வளர்க்கும். சரீரத்துக்கு அழகைக் கொடுக்கும்.

**சீரகம்:**—பித்த சாந்தியுண்டாக்கும். அரோசகம், வயிற்றுவலி, காசம், சீத ரத்தக்கிராணி இவற்றை விலக்கும். சரீரத்துக்குறுதியும், கண்களுக்குக் குளிர்ச்சியும் தரும்.

**பெருஞ்சீரகம்:**—வயிற்றுவலி, அஜீரணம் வயிற்றுப்பிசம், அதிதும்மல், பீனிசம் இவற்றைப் போக்கும்.

**கருஞ்சீரகம்:**—மண்டைக்கரப்பன், விரணம், சிராப்பீனிசரோகம், உள்சூடு, தலைநோவு, கண்ணோய், இவைகளை நீக்கும்.

**கோத்தமல்லி:**—உள்சூடு, பயித்தியவேகம், அஜீரணம், வாந்தி, விக்கல், பெரும்ஏப்பம், ஆகிய இவைகளைப்போக்கும்.

**வெந்தயம்:**—கணமாந்தம், அஸ்திசுரம், சீதக்கழிச்சல், இரத்த பித்தம், உள்சூடு முதலிய பிணிகளை விலக்கும்.

**பெருங்காயம்:**—தந்தரோகம், சர்ப்பவிஷங்கள், கிருமி, அஜீரணம், வாயு முதலியவற்றைப் போக்கும்.

**ஓமம்:**—இருமல், அஜீரணம், வயிற்றுப்பிசம், அதிசாரம், குடலெரிச்சல், ஆசனக்கடுப்பு, சீதபேதி இவற்றை விலக்கும்.

**மஞ்சள்:**—சரீரத்திலுள்ள துர்நாற்றத்தை நீக்கி அழகைக் கொடுக்கும். தலைவலி, சலதோஷம், நாசிகாரோகம், ஐவகைவலி இவற்றைப் போக்கும்.

**வெங்காயம்:**—(ஈருள்ளி) தேகஉஷ்ணம், மூலரோகம், சிரங்கு, பித்தம், உஷ்ணபேதி இவைகளை நீக்கும். அக்கினிமந்தம், இருமல், வயிற்றுப்பிசம் இவைகளை அதிகப்படுத்தும்.

**வெள்ளைப்பூண்டு:**—வாயு, சன்னி, வாதம், தலைநோவு, நீர்க்கோவைரோகம் இவைகளை நீக்கும்.

## மரக்கறி வகைகளின் குணம்.

**கத்திரிக்காய்:**—பித்தத்தாலுண்டாகும் கபத்தை நீக்கும். சொறிசிரங்கையும், கிரந்தியையும் எழுப்பிவிடும்.

**வெண்டைக்காய்:**—கிராணி, பேதி, சீதரெத்தக்கழிச்சல் இவற்றைப் போக்கும். நாவுக்கு ருசி உண்டாக்கும்.

**கோத்தவரைக்காய்:**—(சீனியாவரைக்காய்) பயித்தியம், கபம், வாதக்கடுப்பு இவற்றை உண்டாக்கும். மருந்தை முறிக்கும்.

**மிளகு காய்:**—வாதரோகங்களையும் சீழ்மூலத்தையும் நீக்கும்.. சரீர அனல் உண்டாக்கும். மோர் சேர்த்துச் சாப்பிட்டால் ஆகாரத் தகனத்திற்கு நல்லது.

**வெள்ளரிக்காய்:**—கரப்பன், நீர்த்துவாரத்தினவு, நீர்ச்சுருக்கு இவைகளை நீக்கும். நல்ல பசியுண்டாக்கும், மருந்தை முறிக்கும்.

**பாகல் காய்:**—கொம்புப் பாகல்காய் வாதபித்த கோபங்களையுண்டாக்கும். நல்ல ஔஷதங்களை முறிக்கும். மலைபிரதேசங்களில் உண்டாகும் காட்டுப் பாகல்காய் ஆகார தகனத்

தையும் நல்லபசியையு முண்டாக்கும். வாதபித்த கோபங்களை நீக்கும்.

**புடலங்காய்:**—கரப்பன், புடை, கிரந்தி, பயித்தியம் இவற்றை அதிகப்படுத்தும். இரத்தம் உண்டாக்கும்.

**வழுதலங்காய்:**—எவ்வகைத் தேகிகட்கும் பொருந்தும். கபத்தைக்கரைக்கும். பத்தியத்திற்கும் உதவும்.

**பூசணிக்காய்:**—தேக அனலையும், மிகுந்த பித்தத்தையும் நீக்கும். நல்ல பசியை உண்டாக்கும், வாதத்தையும், கப கோபத்தையும் விளக்கும்.

**முருங்கைக் காய்:**—பல ரோகங்களையும் நீக்கும். கபத்தை விலக்கும். இரத்த விருத்தி யுண்டாக்கும். பத்தியத்திற்கு நல்லது.

## கீரை வகைகளின் குணம்.

**வெண்கீரைத்தண்டு:**—உஷ்ணத்தைத் தணித்து வெளி மூல ரோகத்தையம், பித்த எரிச்சலையும் நீக்கும்.

**செங்கீரைத்தண்டு:**—பித்த நோயையும், பெரும்பாட்டையும், சன்னி வாத சுரத்தையும் நீக்கும்.

**அறக்கீரை:**—சுரம், நடுக்கல், சன்னிவாதம், கபரோகம், வாதநோய் இவைகளைப் போக்கும். இரத்த விருத்தி யுண்டாக்கும்.

**சிறுகீரை:**—விரணம், மூத்திரக்கிரிச்சரம், வீக்கம், பித்த நோய், பாஷாணவிஷங்கள் இவற்றை நீக்கும். நல்ல அழகு உண்டாக்கும்.



# PRICE LIST
OF
# RELIABLE FAMILY MEDICINES
FOR
# CHILDREN.



நெய்யூர் சிசுவைத்திய ஆசிரமத்தின் உத்தமமான

## குழந்தை மருந்துகளின்

கிரய ஜாபிதா.



**Sisu Vaidya Asramam,**

NEYYOOR,

(TRAVANCORE)

# General Directions.

## பொது விதி.

குழந்தைகளுக்கு ஊட்டும் சாதாரணமான தைலங்களின் அளவு ஆறு நேரத்திற்கு அரை அவுண்ஸ். ஆனால், உத்தமதாளித் தைலம். கனசகூரி தைலம் முதலிய மருந்துகளை அரை வயதிற்குக் கீழுள்ள குழந்தைகளுக்கு சற்றுக் குறைத்துக் கொடுக்கவேண்டும்.

ஒன்றிரண்டு மாசங்களுக்குக் கீழுள்ள குழந்தைகளுக்கு பேதிக் கட்டு இருக்குமாயின் "பால சிகிற்சா நிதானத்தில்" சிகப்பு, பிரளீ முதலிய நோய்களுக்குச் சொல்லப்பட்டிருக்கும் மருந்துகளையே அளவிற்குச் சற்று கூட்டிக் கொடுத்து பேதிபோகச் செய்யவேண்டும். விரோசன மாத்திரை கொடுக்கவேண்டுமாயின் இரண்டு மாசங்களுக்கு மேற்பட்ட குழந்தைகளுக்கு கால் மாத்திரை முதல் அரை மாத்திரை வரையிலும், அரை வயதிற்கு மேற்பட்ட குழந்தைகளுக்கு ஒரு மாத்திரையும் கொடுக்கவேண்டும்.

குழந்தையின் சிகிற்சை காலத்தில் தாயும் குழந்தையும் பத்தியம் காத்துக்கொள்ளவேண்டும். இச்சாபத்தியம் என்று சொல்லியிருப்பது தாயும் குழந்தையும் தலை முழுகுதலையும், புளிப்பான பதார்த்தங்களை உண்பதையும் விலக்குதலாம்.

இதில் சொல்லப்பட்டிருக்கும் மருந்துகள் யாவும் குழந்தைகளின் நோய்களுக்கென்று உயர்ந்த சரக்குகளால் செய்யப்பட்டதும், எமது குடும்ப பாரம்பரையாய்க் கையாடப்பட்டு வருவதும், நோய்களைக் கண்டிக்கக்கூடியதும், சரீர வளர்ச்சிக்கு ஆகாரமாக உதவுவதுமாதலால் இம்மருந்துகளை ஒரே தடவையில் நெடுநாள் உபயோகப்படுத்தி வந்தபோதிலும் யாதொரு கெடுதியையும் உண்டாக்காது.

எமது சித்தவுஷதங்கள் தவிர பொதுவாக ஆயுர்வேத வைத்தியர்கள் வழங்கிவரும் குழந்தைகளின் பல மருந்துகளையும் ஜனங்களின் வசதிக்கென்று நாமும் தயார்செய்து வைத்துள்ளோம்.

குழந்தைகளின் நோய்கள் விஷயமான விபரங்களை அறியவும் மருந்துகள் பெற்றுக்கொள்ளவும் கடிதங்கள் எழுதுவோர் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்.


*The Manager,*

**Sisu Vaidya Asramam,**

Neyyoor, *Travancore.*

## Medicines for Diseases in Pregnancy.

## கேர்ப்ப ரோகங்களுக்கேற்ற ஔஷதங்கள்.

### 1. கேர்ப்ப விருத்தி எண்ணெய்.

*For preventing abortion & all diseases of Foetus.*

இம்மருந்தை கெர்ப்பம் தரித்த இரண்டாம் மாதம் முதல் ஒவ்வொரு மாதமும், தினம் இருமுறை வீதம் மூன்று நாள் சாப்பிட்டு வந்தால் கெர்ப்ப ஸ்திரீகளுக்கு நேரிடும் பலவித நோய்களை விலக்கிக் கருவை வளரச்செய்யும். இச்சாபத்தியம்.

பன்னிரண்டு நேரம் சாப்பிடக்கூடிய
இரண்டு அவுண்ஸ் மருந்து விலை ரூபாய் 1.

### 2. சூலெண்ணெய்.

*For all diseases peculiar to Pregnant women.*

நமது இம்மருந்து மிக அருமையான சாதனங்களால் செய்யப்பட்டதால் சாதாரணமாய் வழக்கப்பட்டுவரும் சூலெண்ணெய்களைவிட மிகச் சிறப்பு வாய்ந்தது. இதைக் கெர்ப்ப ரோகங்கள் பலவற்றிலும் சாப்பிடவும், வெளிப்பிரயோகமாகவும் உபயோகப்படுத்தலாம். நான்காம் மாதம் முதல் மாதந்தோறும் இதில் ஒரு அவுண்ஸ் மூன்று நாள் ஆறு தடவை சாப்பிடலாம். இச்சாபத்தியம்.

இரண்டு அவுண்ஸ் மருந்து விலை ரூபாய் 1 அணா 8.

### 3. பால் சுத்திக்கு அமிர்தாதி சூரணம்.

*For purification of mother's milk.*

இந்தச் சூரணத்தில் திரிகடிப்பிரமாணம் எடுத்து சமபாகம் சீனிசேர்த்து தினம் இருமுறை வீதம் தாய் சாப்பிட்டுவர

பாலிலுள்ள விஷங்கள் நீங்கி சுத்தமுண்டாகும். இச்சா பத்தியம். பத்துநாள் சாப்பிடக்கூடிய சூரணம் விலை ரூபா 1.

4. பூர்ணசந்திரோதய லேகியம்.

*For removing constipation in mother and to restore appetite and pure blood.*

இந்த லேகியத்தில் நெல்லிக்காய்ப் பிரமாணம் தினம் இருமுறை வீதம் தாய் சாப்பிட்டு வர மலபந்தம் வாயு முதலியவை நீங்கி இரத்த சுத்தியும் பால் சுத்தியுமுண்டாகும். பத்தியமில்லை. ஒரு ருத்தல் லேகியம் விலை ரூபா 3.

## சிகப்பு நோய்களுக்கு.

5. சுத்தமான கோரோசனை.

*Real Gorochanai*

ஒரு மஞ்சாடி நிறை விலை அணா 6.

6. சிகப்புத் தைலம்.

*A common medicine for all kinds of SIGAPPU.*

குழந்தைகளுக்கு உண்டாகும் சிகப்புநோய்களுக்கு இது ஒரு பொதுவான மருந்து. இச்சாபத்தியம்.

குழந்தைகளுக்கு மூன்று நாள் ஆறு நேரம் கொடுக்கக்கூடிய
அரை அவுண்ஸ் தைலம் விலை அணா 3.
இரண்டு அவுண்ஸ் தைலம் விலை அணா 11.

7. ரோஜனுதித் தைலம்.

*A specific for all varieties of SIGAPPU.*

சிகப்பு ரோகங்கள் யாவற்றிற்கும் இது ஒரு சஞ்சீவி. இச்சாபத்தியம்.

குழந்தைகளுக்கு ஆறு நேரம் கொடுக்கக்கூடிய
அரை அவுண்ஸ் தைலம் விலை அணா 6.
இரண்டு அவுண்ஸ் தைலம் ரூ 1 அணா 6.

8. தேற்றிமூல நெய்.

*A valuable specific for serious types of SIGAPPU.*

இது சிகப்பு ரோகங்கள், அவற்றைச் சார்ந்த உதாரோகங்கள், உடல் மெலிதல் இவற்றிற்கு நல்லது. கொடுக்கும் அளவு அரை அவுண்ஸ் நெய் ஆறு நேரம். இச்சாபத்தியம்.

இரண்டு அவுண்ஸ் நெய் விலை ரூ. 1 அணா 10.

9. தோஷ நிவாரண நெய்.

*A good restorative for debility of infants due to DHOSHAM.*

இது குழந்தைகளுக்கு பக்ஷித்தோஷம், பறவைத்தோஷம், குழித்தோஷம், நிழல்தோஷம், இரைத்தோஷம் முதலிய பல நோய்களை நீக்கி சரீரமெலிவை நிவிர்த்திசெய்யும். ஒரு சிறு கரண்டியளவு உள்ளுக்குக் கொடுத்து தலையிலும் ஒழுங்காகத் தேய்த்துக் குளிப்பித்துவரலாம். பத்தியமில்லை.

ஆறு அவுண்ஸ் நெய் விலை ரூபாய் 2.

10. கபகேசரித் தைலம்.

*For Bronchial complications in SIGAPPU, PIRALI &c.*

குழந்தைகளின் சிகப்பு, பிரளி முதலிய நோய்களோடு உண்டாகும் காச்சல், கபம், இழைப்பு, வலி முதலியவற்றிற்கு இம்மருந்து உபயோகமானது.

அரை அவுண்ஸ் தைலம் விலை அணா 8.
இரண்டு ,, ,, ரூ. 1 அணா 12.

11. புல்லுருவி மாத்திரை.

*For SIGAPPU with Dysenteric symptoms.*

சிகப்பு நோயோடு, மிதமிஞ்சின உஷ்ணத்தினால் குழந்தைகளுக்கு மலத்தில், இரத்தம், சளி காணப்பட்டால் சிகப்பு

நோய்க்குச் செய்துவரும் சிகிற்சை காலத்தில் இம்மாத்திரையில் ஒன்று ஆட்டின் பாலில் உரைத்துக் கொடுத்துவர சுகமுண்டாகும்.

ஆறு மாத்திரைகள் விலை அணு 4.

## 12. மலர் நீறு.

*For Stomatitis in children.*

குழந்தைகளுக்கு உண்டாகும் பூப்புநோய்களுக்கு இம் மருந்தில் கொஞ்சம் எடுத்து தேனில் குழைத்து நாவிலும் உதடுகளிலும் தடவிவர மேற்படி நோய் மாறிவிடும்.

பாக்கட் ஒன்றுக்கு விலை அணு 2.

# பிரளி நோய்களுக்கு.

## 13. கலம்பலாதித் தைலம்.

*A general remedy for all kinds of PIRALI.*

குழந்தைகளின் பலவிதமான பிரளி நோய்களுக்கும். அவற்றைச்சார்ந்த வயிற்றப்பொருமல், வயிற்றுவலி முதலியவைகளுக்கும் இம்மருந்தில் அரை அவுண்ஸ் ஆறு நேரம் வீதம் ஒழுங்காய்க் கொடுத்து வரலாம். பத்தியமில்லை

அரை அவுண்ஸ் தைலம் விலை அணு3 ·
இரண்டு „ „ „ அணு12.

## 14. மல்லிகை மலர்த் தைலம்.

*A specific for all varieties of PIRALI.*

சகலவிதப் பிரளி நோய்கள், அவற்றாலுண்டாகும் அஜீரணம், வயிற்றுவலி, பச்சைநிறப்பேதி, இவைகளுக்கு இம் மருந்தைக் கொடுத்துவரலாம். இச்சாபத்தியம்.

மூன்று நாள் ஆறு நேரம் குழந்தைக்குக் கொடுக்கக்கூடிய
அரை அவுண்ஸ் தைலம் விலை அணு 4.
இரண்டு அவுண்ஸ் தைலம் விலை அணு 14

15. சின்னித் தைலம்.

*For serious types of PIRALI.*

பிரளி நோய்கள் யாவற்றிற்கும் இம்மருந்து மிகச் சிறந்தது. வயிற்றிரைச்சல், சகிக்க முடியாத வயிற்றுவலி, பச்சைப் பேதி, அஜீரணம், இவற்றைக் கண்டிக்கும். இச்சா பத்தியம்.

அரை அவுண்ஸ் தைலம் விலை அணு 5.
இரண்டு ,, ,, ,, ரூ. 1.

16. விரோசன மாத்திரை.

*Purgative Pills for children.*

குழந்தைகளுக்கு உண்டாகும் மலக்கட்டிற்கு, வயதிற்கு தக்கபடி இதில் கால்மாத்திரை முதல் ஒரு மாத்திரை வரை யிலும் முலைப் பாலிலாவது இஞ்சிச் சாற்றிலாவது உரைத்துக் கொடுக்க பேதிக்கட்டு பொருமல், மந்தம், காச்சல் தீரும். பெரியோருக்கும் இஞ்சி சாற்றில், இரண்டு அல்லது மூன்று மாத்திரைகள் கொடுக்கலாம்.

30 மாத்திரைகள் விலை அணு 8.

17. உத்தம தாளித் தைலம்.

*For chronic constipation.*

சாதாரண மருந்துகளால் பேதி போகாமலிருக்கும் கடினமான பிரளி நோய்களுக்கு இம்மருந்தில் கால் அவுண்ஸ் ஆறு நேரமாக குழந்தைக்குக் கொடுக்கலாம்.

கால் அவுண்ஸ் தைலம் விலை அணு 3.
இரண்டு ,, ,, ,, ரூ. 1 அணு 4.

## மாந்த நோய்களுக்கு.

### 18. ஆதிமூலத் தைலம்.

*To stop Diarrhoea & its complications in children.*

இது குழந்தைகளுக்கு மாந்த நோயினாலுண்டாகும் வயிற்றுப்போக்கு, அஜீரண பேதி, வாந்தி, தாகம், முதலியவற்றை நீக்கும். இச்சாபத்தியம்.

மூன்று நாள் ஆறுநேரம் கொடுக்கக்கூடிய

அரை அவுண்ஸ் தைலம் விலை அணா 4.
இரண்டு ,, ,, ,, ,, 14.

### 19. கெருடத் தைலம்.

*For all abdominal Diseases in children.*

இரை மாந்தம், விஷ மாந்தம் முதலிய கடினமான மாந்த நோய்களுக்கும் விஷமாந்தக் கணை ரோகங்களுக்கும் சகலவித வயிற்று நோய்களுக்கும் இம்மருந்தை குழந்தைக்குக் கொடுத்து வரலாம். சரீரத்தில் வீக்கம் இருக்குமானால் ஜலபானம் நீக்கி கடின பத்தியத்தோடும் மற்ற மாந்த நோய்களுக்கு இச்சாபத்தியத்தோடும் சாப்பிடவேண்டியது.

அரை அவுண்ஸ் தைலம் விலை அணா 8.
இரண்டு ,, ,, ரூ. 1 அணா 12.

### 20. கிஞ்சுகாதி நெய்.

*A valuable remedy for all varieties of MAUNTHOM.*

எல்லாவித மாந்த நோய்களுக்கும் இது ஓர் உயர்ந்த மருந்து, வயிற்றிரைச்சல், பேதி இளக்கம், வாந்தி, மயக்கம் இவற்றைக் கண்டிக்கும். இச்சாபத்தியம்.

இரண்டு அவுண்ஸ் நெய் விலை ரூ. 1 அணா 4,

## எச்சி ரோகங்களுக்கு.

21. வச்சிரத்தைலம்.

*For YECHI (Bronchial complaints).*

குழந்தைகளுக்கு உண்டாகும் எச்சி, சுழியன் முதலிய ரோகங்களுக்கும், இழைப்பு, இருமல், காய்ச்சல் முதலியவற்றிற்கும் இம்மருந்து பிரயோஜனமானது. இச்சாபத்தியம்.

ஆறு நேரம் கொடுக்கக்கூடிய

அரை அவுன்ஸ் தைலம் விலை அணு 4.
இரண்டு ,, ,, ,, அணு 14.

22. குங்கும மாத்திரை.

*For YECHI (Bronchial complaints).*

ஒரு வயதிற்கு மேற்பட்ட குழந்தைகளுக்கு இழைப்பு, கபம், மலக்கட்டு முதலியவற்றிற்கு இம்மாத்திரையில் ஒன்றை ஒரு பெரிய கரண்டியளவு குப்பைமேனிச்சாற்றில் உரைத்துக் கொடுக்க உடனே வாந்தியுண்டாகி கபம் வெளிப்பட்டு சுகமுண்டாகும். இஞ்சிச்சாற்றிலும் கொடுக்கலாம்.

பத்து மாத்திரைகள் விலை அணு 4.
ஐம்பது ,, ,, ரூ. 1.

## சுழியன், சுரம் முதலிய நோய்களுக்கு.

23. குடோர சஞ்சீவித் தைலம்.

*For Bronchitis, Broncho-Pneumonia Asthma &c.*

சுழியன், விலாச்சுழியன், சிலேற்பனசுரம், கபசுரம் முதலிய நோய்களுக்கு இது எற்ற ஔஷதம். இதில் அரை அவுன்ஸ் தைலம் ஆறுநேரமாசக் குழந்தைக்குத் தனியாகவும் அனுபானங்களுடனும் கொடுக்கலாம். இத்தைலத்தைச் சிறிது அனல்காட்டி சிரசிலும் வைக்கலாம்.

இரண்டு அவுன்ஸ் தைலம் விலை ரூ. 1 அணு 8.

24. குடோரித் தைலம்.

*For worm troubles, Delirium, Collapse &c.*

குழந்தைகளுக்கு இரைக்காச்சல், இரைக்கோபம், சீதம், சன்னி முதலியவற்றிற்கு இந்தத் தைலத்தை உள்ளுக்கும் கொடுத்து வெளிப்பிரயோகமாகவும் உபயோகப்படுத்தலாம். உள்ளுக்குக் கொடுக்கும் அளவு அரை அவுன்ஸ்ஆறு நேரம்.

இரண்டு அவுன்ஸ் தைலம் விலை ரூ. 1.

25. கோமேதகக் குளிகை.

*For Bronchitis Pneumonia &c.*

இம்மாத்திரை, கபசுரம், சன்னி, வலி, இழுப்பு இவையில் குழந்தைகளுக்கு அனுபானங்களுடன் கொடுக்கக்கூடியது.

ஒரு டஜன் மாத்திரை விலை ரூபாய் 2.

26. கபகர இரத்தினக் குளிகை.

*These pills are very carefully prepared with costly ingredients such as Gold, Musk, Pearls &c. &c.*

*Very useful for acute stage of Lung Diseases.*

இது குழந்தைகளுக்குச் சகலவித கபரோகங்களுக்கும் சன்னிகளுக்கும் சகல சுரங்களுக்கும் கொடுக்கக்கூடியது.

அரை டஜன் மாத்திரைகள் விலை ரூபாய் 12.

27. ஆனந்த சஞ்சீவித் தைலம்.

*A very valuable medicine for all Fevers and Lung diseases.*

இந்தத் தைலம் எச்சி, சுழியன், விலாச்சுழியன், முதலிய நோய்களுக்கும், சிலேற்பனசுரம், மாந்தசுரம், கபசுரம் முதலிய சுரங்களுக்கும், சகல கபரோகங்களுக்கும் சகலவித சன்னிகளுக்கும், தனியாகவும், அனுபானங்களுடனும் குழந்தைக்குக்

கொடுக்கலாம். மேற்படி நோய்களில் வெளிப்பிரயோகத்திற்கு குடோரித் தைலத்தையாவது குடோர சஞ்சீவித் தைலத்தையாவது உபயோகப்படுத்தலாம். அரை வயதிற்கு மேலுள்ள குழந்தைகளுக்கு அரை அவுண்ஸ் தைலம் ஆறு நேரமாகவும் அதற்குக் கீழுள்ள குழந்தைகளுக்கு வயதிற்குத்தக்கபடி சற்றுக் குறைத்தும் கொடுக்கலாம்.

இரண்டு அவுண்ஸ் தைலம் விலை ரூபாய் 2.

## கரப்பன், கிரந்தி முதலிய நோய்களுக்கு.

### 28. கனகசூரி தைலம்.

*For KARAPPAN (Eczema, Skin diseases, Boils, Ulcers &c.)*

குழந்தைகளின் பலவகையான கரப்பன், அக்கி, தழுதணை முதலிய நோய்களுக்கு இம்மருந்தை உள்ளுக்கும் கொடுத்து புண்களிலும் போட்டுவரலாம். உள்ளுக்குக் கொடுக்கும் அளவு ஆறு மாசங்களுக்குக் கீழுள்ள குழந்தைகளுக்கு ஒரு அவுண்ஸ் தைலம் ஏழு நாள் பதினன்கு நேரம். அதற்கு மேற்பட்ட குழந்தைகளுக்குப் பன்னிரண்டு நேரம். இச்சாபத்தியம்.

ஒரு அவுண்ஸ் தைலம் விலை அணு 8.

### 29. கத்தபாமிர்த எண்ணெய்.

*For External use in KARAPPAN.*

இதைக் கழுத்திக்குக் கீழுள்ள புண்களில் தொட்டுப் போட்டுவந்தால், கரப்பன், அக்கி இவைகளைச் சேர்ந்துள்ள புண்கள் ஆறும். ஒரு அவுண்ஸ் தைலம் விலை அணு 6.

### 30. வேம்பாடை எண்ணெய்.

*An oil for bath for KARAPPAN in children.*

வருத்தமான கரப்பன் நோய்களுக்கு இந்த எண்ணெயைத் தலையிலும் சரீரத்திலும் தேய்த்து வென்னீரில் குளிப்

பாட்டிவர, சொறிதல், ஊர்தல், நீர்வடிதல் முதலியவை நீங்கி விரணங்கள் ஆறிவரும். சிகப்பு நோயாலுண்டான குழிந்த புண்களுக்குத் தொட்டுப்போட்டுவந்தால் நிரந்து ஆறிவிடும். பத்தியமில்லை. ஆறு அவுண்ஸ் எண்ணெய் விலை ரூபாய் 1.

31. கோலாதி நெய்.

*A most effective medicine for KIRANTHI.*
*(Serious types of boils, Ulcers &c.)*

கிரந்தி, கரப்பன் முதலிய கொடிய ரோகங்களில் இம் மருந்தைக் குழந்தைக்கு உள்ளுக்குக் கொடுத்துவரலாம். கொடுக்கும் அளவு:—ஒரு அவுண்ஸ் நெய் ஆறு நாள் பன்னிரண்டு நேரம். பந்தியம்: ஒரு தடவைக்கு மூன்று நாள் வீதம் குழந்தைக்கு மருந்து கொடுத்து, தாய் உப்பு, புளி, ஜலபானம்நீக்கி முருங்கைக்கீரையோடுசாதம் சாப்பிட்டுவரவேண்டும்.

இரண்டு அவுண்ஸ் நெய் விலை ரூபா. 2.

32. வீராணித்தைலம்.

*For applying to Ulcers.*

கிரந்தி கரப்பன் முதலிய நோய்களாலுண்டாகும் புண்களில் இதைத் தொட்டுப் போட்டுவரலாம்

ஒரு அவுண்ஸ் தைலம் விலை அணா 6.

33. பாலரஞ்சித எண்ணெய்.

*A cooling oil for bath,*
*both for mother and child.*

இதைத் தாயும் குழந்தையும் தேய்த்து ஸ்நானம் செய்யலாம். குழந்தைகளுக்கு சிகப்பு, கரப்பன் முதலிய நோய்களையும் சரீரத்திலுள்ள அமிதமான உஷ்ணத்தையும் அவற்றாலுண்டாகும் பலவித நோய்களையும் அகற்றும். பந்தியமில்லை.

ஆறு அவுன்ஸ் எண்ணெய் விலை ரூபா. 1.

34. அமிர்த ரசம்.

*For Rickets with aneamia.*

கணையினுலும், மற்றும் பிணிகளினுலும் சரீரத்தில் இரத்தம் குறைந்து நீரேறி, வெளிறி, பலவீனத்தினல் கஷ்டப்படும் குழந்தைகளுக்கு இம்மருத்தில் கால் அவுண்ஸ் வீதம் தினம் இரண்டு தடவை பாலிலாவது வென்னீரிலாவது விட்டு குடிக்கக் கொடுத்துவரலாம். மதுரமாயிருக்கும். பத்தியமில்லை

ஆறு அவுண்ஸ் மருந்து விலை ரூ. 1.

35. பிரபாதி சூரணம்,

*For Rickets.*

கணை நோயினுலும் வேறு நோய்களினுலும் ஆகாரத் தகனம் குறைந்து உடல் மெலிந்திருக்கும் பிள்ளைகளுக்கு இந்தச் சூரணத்தில் திரிகடிப் பிரமாணம் எடுத்து சமபாகம் சீனியில்சேர்த்து இரண்டொரு துளி வென்னீர் விட்டுக் குழைத்து காலை மாலை சாப்பிட்டுவர பசியுண்டாகி ஆகாரம் ஜீரணித்து உடல் மெலிவுதீரும். வயிற்றுவலி நீங்கும். பத்தியமில்லை.

ஒருமாசம் சாப்பிடக்கூடிய மருந்து விலை ரூபா 1 அணு 8.

36. கணை நெய்.

*A good Tonic for Rickety and weak children.*

இது கணை நோயையும் அதைசேர்ந்த பல நோய்களையும் விலக்கும். முக்கியமாய் ஆகாரக் குறைவு, சிறுநீரில் வெள்ளை, உடல்மெலிவு இவைகளை நீக்கும். ஒரு வயதிற்கு மேலுள்ள குழந்தைகளுக்கு ஒரு அவுண்ஸ் நெய் மூன்றுநாள் ஆறுநேரமாகக்கொடுக்கலாம். பத்தியம்: புளி தேங்காயெண்ணெய் இவற்றை விலக்கவேண்டும். இரவில் ஆகாரத்துக்கு மேல் ஒருதடவை வீதம் மாத்திரம் கொடுத்துவந்தால் பத்தியமில்லை.

இரண்டு அவுண்ஸ் நெய் விலை ரூபா 1.

37. பால ராக்ஷாதித்தைலம்.

*Oil for applying to the head and for bath during convalescence after fever.*

குழந்தைகளுக்கு சுரம் விட்டபிறகு இருமல். நீர்த்தோஷம் முதலியவற்றிற்கும் அவற்றைச்சேர்ந்த பல நோய்களுக்கும் இந்தத்தைலத்தில் கொஞ்சம் தலையில் பொத்தவும், தேய்த்துக் குளிக்கவும் செய்யலாம்.

இரண்டு அவுன்ஸ் தைலம் விலை ரூபா 1.

## சிசு ரோகங்களுக்குப் பொதுவான மருந்துகள்.

### மாத்திரைகள்.

| | | ரூ. | அ. | பை |
|---|---|---|---|---|
| சிகப்புக் குளிகை | (20 மாத்திரைகள்) | 0 | 8 | 0 |
| பிரளிக்குளிகை | (30 ,, ) | 0 | 8 | 0 |
| மாந்தக்குளிகை | (30 ,, ) | 0 | 8 | 0 |
| பேதிக்குளிகை | (30 ,, ) | 0 | 8 | 0 |
| மாந்தங்களுக்கும் கழிச்சலுக்கும் மாதளாதி குளிகை | (15 மாத்திரைகள்) | 0 | 8 | 0 |
| சிசுபேதி மாத்திரை | (15 ,, ) | 0 | 8 | 0 |
| எச்சிக்குளிகை | (30 ,, ) | 0 | 8 | 0 |
| கபம் காச்சல் முதலியவைகளுக்கு வில்வாதி மாத்திரை | (30 மாத்திரைகள்) | 0 | 8 | 0 |
| மாந்தக்காய்ச்சல், இரைக்காய்ச்சல், மலச்சிக்கல் முதலியவைக்கு பூராட மாத்திரை | (15 மாத்திரை) | 0 | 8 | 0 |
| இருமலுக்கு கோஷ்டாதி குளிகை | (20 மாத்திரைகள்) | 0 | 8 | 0 |
| காச்சலுக்கு கற்கடகமாத்திரை | (30 மாத்திரைகள்) | 0 | 8 | 0 |

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| பிள்ளை ஏலாதி மாத்திரை | (10மாத்திரைகள்) | 0 | 8 | 0 |
| சென்றதிசைவென்றான் குளிகை | (15 ,, ) | 0 | 8 | 0 |
| கற்பூராதி குளிகை | (15 ,, ) | 0 | 8 | 0 |
| விலையாடிக் குளிகை | (30 ,, ) | 0 | 8 | 0 |
| பெருங்காயக் குளிகை | (20 ,, ) | 0 | 8 | 0 |
| பூபதிக் குளிகை | (20 ,, ) | 0 | 8 | 0 |
| அமிர்தாதிகுளிகை | (20 ,, ) | 0 | 8 | 0 |
| சர்வாங்கக் குளிகை | (20 ,, ) | 1 | 0 | 0 |
| கோரோசனைக்குளிகை | ( 6 ,, ) | 2 | 0 | 0 |
| கஸ்தூராதிகுளிகை | ( 6 ,, ) | 6 | 0 | 0 |
| கடபகுலாந்தகன்குளிகை | ( 6 ,, ) | 8 | 0 | 0 |
| கண்டூஷ மாத்திரை | ( 6 ,, ) | 12 | 0 | 8 |

தைலங்கள்

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| எச்சித்தைலம் | (இரண்டு அவுண்ஸ்) | 0 | 12 | 0 |
| இண்டுத்தைலம் | ( ஒரு ,, ) | 0 | 12 | 0 |
| பிள்ளைச்சருவாங்கம் | ( ஒரு ,, ) | 1 | 0 | 0 |
| முள்ளெலித்தைலம் | ( ஒரு ,, ) | 1 | 0 | 0 |
| குமாரகண்டத்தைலம் | ( ஒரு ,, ) | 1 | 0 | 0 |
| முட்டைத்தைலம் | ( 2 ,, ) | 1 | 0 | 0 |
| முட்டைச் சருவாங்கம் | ( ஒரு ,, ) | 1 | 8 | 0 |
| முலைப்பால் தைலம் | ( 2 ,, ) | 1 | 0 | 0 |
| ஆட்டின்பால் தைலம் | ( 4 ,, ) | 1 | 0 | 0 |
| கற்பூரவல்லித்தைலம் | ( 3 ,, ) | 1 | 0 | 0 |

நெய்கள்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| செங்கிரந்திக்கு சிங்கேசரிநெய் | ( 4 ,, ) | 10 | 0 | 0 |
| கணைக்கு தேவாமிர்த நெய் | ( 6 ,, ) | 12 | 0 | 0 |
| கணைக்கு சிதேவி நெய் | ( 6 ,, ) | 15 | 0 | 0 |
| பித்தசோகைக் கணைக்கு பஞ்ச கோமிய நெய் | ( 6 ,, ) | 15 | 0 | 0 |

## மாத்திரைகளுக்கு அனுபானங்கள்.

*Medium for administering Pills.*

சிகப்பு நோய்க்கு மல்லி, ஜீரகம், அதிமதுரம் இவைகளின் கஷாயத்திலும், பிரளிக்கு பிரண்டையிலைச் சாற்றிலும் வெங்காயச் சாற்றிலும் மாந்த நோய்க்கும், கழிச்சலுக்கும் சுக்கு, ஓமம், கோரங்கிழங்கு இவற்றின் கஷாயத்திலும் காய்ச்சல், எச்சி, மலக்கட்டு இவைகளுக்கு இஞ்சிச் சாற்றிலும், இருமலுக்கு ஆடாதோடைக் கஷாயத்திலும் மாத்திரைகள் உரைத்துக் கொடுக்கலாம்.



மானேஜர்,

சிசுவைத்திய ஆசிரமம்,

நெய்யூர், தென் திருவிதாங்கூர்.

PRINTED AT THE 'AMELIA' PRESS, NEYYOOR.